உ

சிவ சிவ

# திருநாவுக்கரசர் திருவடிப்புகழ்மாலை

*

சிவசேனபதி

ப. தி. சோ. குமரசாமி செட்டியார்

அவர்கள்

நினைவுமலர்.

*



1957

14-1

உ

திருச்சிற்றம்பலம்



—சிவ

பூஜா துரந்
தரர் சித்தாந்
த இரத்தினாக
ரர் சித்தாந்தக்
காவலர் சிவ சேனாபதி சைவத் தமிழ்
மணி சிவனடியார் திருக்கூட்டத்
தலைவர் ப. தி. சோ. குமரசாமி
செட்டியாரவர்
கள் நினைவுக்
குறியாக அன்பொடு இந்நூலை உரிமைப்
படுத்துகின்றோம். சிவம்! சிவம்! சிவம்!

திருச்சிற்றம்பலம்

உ

திருச்சிற்றம்பலம்

பதிபசுபாசப் பனுவ லுணர்த்தும் பண்பாளன்
விதிமுறையாலே தீக்கைகள் பெற்ற திருவாளன்
பதிசோ குமர சாமி யெனுஞ்சற் குருநாதன்
நதிசேர் செஞ்சடை நாதனடியினை நணுகினனே.

திருச்சிற்றம்பலம்

உ

சிவ சிவ

சிவபூசா துரந்தரர், சைவப்புரவலர், சித்தாந்தக்காவலர்

சிவசேனாபதி

தோற்றம்
25.12.1889



மறைவு
29.6.1956

திருக்குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டத் தலைவர்

# ப.தி.சோ.குமரசாமிச்செட்டியார்

அவர்கள்

தோற்றம் 25-12-1889 மறைவு 29-6-1956

14-1

உ

சிவ சிவ

# திருநாவுக்கரசர்
## திருவடிப்புகழ்மாலை

—

திருக்குடந்தைச்

சிவனடியார் திருக்கூட்டத்தலைவர்

சிவசேனாபதி

ப. தி. சோ. குமரசாமி செட்டியார் அவர்கள்

நினைவுமலர்

—

*உயர்திரு ப. தி. சோ. சிங்காரம் செட்டியார்*

*அவர்களால்*

*வெளியிடப்பெற்றது*

—

குடந்தை நகராட்சி உயர்நிலைப்பள்ளி, தமிழ் ஆசிரியர்

வித்துவான், *சு. சுவர்ணகாளீச்சுரன்*

*அவர்களால்*

தொகுக்கப்பெற்றது.

—

உ

சிவமயம்.

# பதிப்புரை

முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே ஈசன் மகனே ஒருகை முகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான்.

சிறப்புடைநல் நூலியற்ற பிறங்கும் உரைநடை எழுத பேச்சுவன்மை சிறக்கும் விரிவுரை யியற்ற செழு நூல்களுக்கு உரைவிரிக்க, ஆராய்ச்சித் தருக்கநூல் இவை காண வழி வகையை வகுத்துக்காட்டும் ஞானவள்ளல் யார்?

தம்மிடம் வருவாரை வரவேற்று வயிற்றுணவு அளித்து, அவர்கள் பக்குவமறிந்து அவர்கள் மனம் ஏற்றுக்கொள்ளும் வகையில் பெருவாரி நலங்களெலாம் எளிதாகச் செவிக்குணவும் இனிதளிக்கும் ஞான அருட் கடல் யார்?

எங்கள் நற்றலைவனே எந்நாட் காண்போம்? எழிலுறு நின் திருமுகத்தை எந்நாட் காண்போம்! இறையருளுணர்த்தும் கண்ணை எந்நாட் காண்போம்! இளநகை யொளிர் செவ்வாயை எந்நாட் காண்போம் எனக் குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டத்து அடியர் குழாம் வருந்த, இணையிலாச் சொற்பெருக்கை எங்கினிக் கேட்

போம்! ஈரேழ் சாத்திரப் பொருளை எங்கினிக் கேட்போம்! திருமுறைகளின் தொனிப்பொருளை எங்கினிக் கேட்போம்! எனச் சைவத் தமிழ்ப் புலவர்குழாம் வருந்த சேனுபதி தமக்குக் கிடைத்தான் எனத் தேவர்குழாம் மகிழ சிற்சபேசா! சிற்சபேசா! சிற்சபேசா! எனச் சிந்தித்து, சிற்சபேசனடி சேர்ந்த எனதருட்குரவன் யார்!

அவர்தான் ஒய்விலாதன, உவமனிலிறந்தன, ஒண்மலர்த்தாள் தந்து, நாயிலாகிய குலத்தினு மென்னை நன்னெறி காட்டி தாயிலாகிய இன்னருள் புரிந்த எனது ஞானத் தந்தையாம், சிவசேனுபதி சிவனடியார் திருக்கூட்டத் தலைவர், ***ப. தி. சோ. குமரசாமி செட்டியாரையா*** அவர்கள் ஆவார்கள்.

தூய வெண்ணீறு துதைந்த பொன்மேனியும், தாழ்வடமும், நாயகன் சேவடிதைவருஞ் சிந்தையும் நைந்துருகிப் பாய்வதுபோல் அன்பு நீர்பொழி கண்ணும், திருமேனி தனிலசைவும், கந்தை மிகையாங் கருத்தும், கையில் தண்டும் கொண்டு பதி - பசு – பாசப் பனுவலுணர்த்தும் பண்பாளராம் ஐயா அவர்கள் தலைவர்க்குத் தலைவராயும் தொண்டர்க்குத் தொண்டராயும் விளங்கிய அப்பர் பெருமானை நினைவூட்டி வாழ்ந்தார்கள்.

அது மட்டுமல்ல. திருப்பூந்துருத்தியில் திருநாவுக்கரசு சுவாமிகள் எழுந்தருளியிருந்த 'திங்களும் ஞாயிறும்தோயும் திருமடம்' எனச் சேக்கிழார் பெருமானுல் போற்றப்படும், மடாலயத் திருப்பணிக் கமிட்டியின் தலைவராயமர்ந்து பணி நிறைவேற ஆவன செய்து, அப்பர் பெருமான் திருவடி யடைந்த

ஐயா அவர்களின் நினைவாக அவரது இளவலாகத் தோன்றும் பெருந்தவப் பேற்றை அடைந்துள்ள உயர்திருவினர் ப. தி. சோ. சிங்காரம் செட்டியாரவர்கள் திருமுறை, சாத்திரம், புராணம், பிரபந்தம் ஆகிய சிவஞானப் பூங்காக் களிலிருந்து புகழ் மலர்களைத் தொகுத்து மாலையாக்கித் திருநாவுக்கரசர்பிரான் திருவடிக்குச்சாத்த விழைந்தார்கள், இப்பணியை அடியேனிடம் ஒப்புவித்தார்கள்.

இப்பணியில் காணப்படும் சிறப்புக்களுக்கு ஐயா அவர்கள் மூன்றாண்டுகள் எனக்குத் தந்த பயிற்சியும் அவர்கள் நூல் நிலையமுமே காரணமாகும். இந்நூலுக்கு ஆசியுரை நல்கிய, மகோ மகோபாத்தியாய சித்தாந்த சரபம் சிவஸ்ரீ காசிவாசி ஈசான சிவாச்சாரிய சுவாமிகளவர் களுடைய பொன்னார் திருவடிக் கமலங்களுக்கு எனது வணக்கத்தினைச் செலுத்தி மகிழ்கின்றேன். இப்பணியில் என்னை ஊக்கிய திருவாவடுதுறையாதீன வித்துவான், திரு. த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களுக்கும், என் அருமை அண்ணா திரு. சு. சுந்தரேசஞ் செட்டியாரவர் களுக்கும் எனது பணிகளுக்குத் தக்க சமயங்களில் துணை செய்யும் திரு. S. K. சொக்கலிங்கம்செட்டியார் உள்ளிட்ட அன்பர்களனைவருக்கும், இப்பணியை எனக்குத் தந்த திரு. ப. தி. சோ. சிங்காரஞ் செட்டியாரவர்களுக்கும் என் றும் கடப்பாடுடையேன்.

காலச் சுருக்கத்தில் வெளிவந்த இவ்வெளியீட்டில் ஏதேனும் குற்றமிருப்பின் குற்றங்களைந்து குணம் பெய்து பாராட்டுமாறு சிவநேயச் செல்வர்களை வணங்கி வேண்டு

கின்றேன். இவ்வாறு என்னை நன்னெறியிற் செலுத்து விக்கும் பன்னிருகைப் பெருமான் பதமலர்களைச் சிந்தித்து வாழ்த்தி வணங்குகின்றேன்.

இங்ஙனம்,
*சு. சுவர்ணகாளீச்சுரன்,*
தமிழாசிரியன்,
நகராட்சி உயர்நிலைப் பள்ளி,
கும்பகோணம்.

——

உ

சிவமயம்.

மகோமகோபாத்தியாய,

சைவ சித்தாந்தசரபம், சிவஸ்ரீ காசிவாசி

*ஈசான சிவாச்சாரிய சுவாமிகள் அருளிய*

# ஆசியுரை.

எல்லா அறிவும் எல்லா முதன்மையும் எல்லா அனுக்கிரகமும் உடைய சிவபெருமான் ஒருவரே பரமபதியெனத் துணிந்து, அப்பெருமா னருளிய வேத சிவாகம நெறி வழுவாது ஒழுகுபவர் சைவ சமயிகளெனப்படுவர். சிவதீக்ஷை பெற்று சைவ நித்தியானுஷ்டானம், சிவபூஜை பஞ்சாக்ஷர ஜெபம், சிவாலய சேவை, குருவாக்கிய பரிபாலனம். மாகேஸ்வரபூஜை முதலிய சைவ தர்மங்களை மேற்கொண்டொழுகுவோர் பூத பரம்பரைக்கு வழிவழியடிமையாவர்.

இத்துணைச் சைவ பரம்பரையிலே தாதம்பேட்டைப் பழுவூரிலே கூடலுடையார் கோத்திரத்திலே சைவத் திருவாளராகிய தியாகராச செட்டியார் குமாரர் கல்வியின் பயனாகிய அறிவொழுக்கங்களால் சிறந்து விளங்கிய சைவத்திரு சோமசுந்தரஞ் செட்டியார் புதல்வர்கள் நால்வருள்ளே, தலைமகனார் செல்வத்திரு, குமரசாமி செட்டியாரவர்கள் ஆவார்கள். அவர்களது நினைவுக்கு அறிகுறியாக சைவ சித்தாந்த ஸ்தாபனாச்சாரியார் நால்வருள்

ஒருவராகப் போற்றப்பெறும் *ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமிகள் (அப்பமூர்த்திகள்) குணமகிமைகளை எடுத்திசைத்து அப்பெருமானது திருவடிக் கண்ணே சாத்தும் செந்தமிழ்ப் பாமாலையாக* எல்லாச் சிவனடியார்களின் திருவுள்ளத்தே எழுந்த நன் மரபை தேர்ந்தெடுத்துத் தொகுத்த மலர் மாலையாதலின் இது *திருநாவுக்கரசு சுவாமிகள் திருவடிப் புகழ் மாலை* என்னும் பெயர் பெறுவதாயிற்று.

மேலே சுட்டிய சைவத்திரு, குமரசாமி செட்டியா ரவர்கள் இளமையிலேயே பிறப்பிலே யமைந்த அறிவு, அடக்கம், தாய், தந்தை, குரு முதலிய பெரியோர்க ளிடத்தே மிகுந்த நன்மதிப்பும், பணிவும், தொண்டும் உடையவராக விளங்கினர். இதன் பயனாக இவருக்குக் கல்விநலம் வளர்ந்து முதிர்ந்து வளம்பெறலாயிற்று. அவர் சிறப்பாகக் கலாசாலையில் தமிழும் ஆங்கிலமும் பயின்ற சிறப்பான பாஷா பாரத துரந்தரர் M. V. ராமானுஜாச் சாரியர் அவர்களிடத்திலே, இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுத்தேர்ந்தார், தேர்ச்சியுற்றார், பின்பு சைவப் பெருநூல்களை, கல்வியறி வொழுக்கங்களா லமைந்த வரும், சைவாச்சாரியருமாகிய வேதாரண்யம் ஸ்ரீமத். தியாகராஜய்யா அவர்களிடத்தில் கற்றுக்கொண்டார்கள்.

சிவானுபூதிப் பெருவாழ்வாகிய, சூரியனார்கோயில் ஆதீனத்துக் குருமூர்த்திகளாகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ முத்துக்குமார தேசிக சுவாமிகள் தமது திருமடத்திலேயே தமது சீடர் களுக்கு சைவ சித்தாந்த சாஸ்திரங்களைப் போதித்து வருங் கால் அவ்வப்போது சென்று வணங்கி சைவ நுட்பங்களை யெல்லாம் கேட்டு உணர்வு சிறந்த சைவ சீலராய் விளங்கினர்.

இத்துணைப் பொதுச் சிறப்பு நூல்களை நன்கு கற்றுத் தேர்ந்தவராகிய விடத்தும், ஒரு சைவத் தமிழ்ப் புலவராயும் கருவிலே திருவுடையராகவும் விளங்கியும், சைவத் தமிழறிஞர்களைக் கண்டபோது அவர்களைச் சிறப்பாக வரவேற்று அவர்களை உபசரித்தலிலும், அவர்களுக்கு வேண்டுவ குறிப்பறிந்து வழங்குதலில் அறிவு நலஞ்சான்ற வள்ளலாக விளங்கினர். சிறந்த நூல்களை இடையருது தொகுத்து சிறந்ததொரு புத்தகசாலையை அமைத்துக் கொண்டார். புலவர்களோடு சல்லாபஞ் செய்தலையே தமக்குச் சிறந்த பொழுதுபோக்காகக் கொண்டிருந்ததனல் இவர்களது இல்லம் ஒரு சைவத் தமிழ்ச்சங்கமாக விளங்கிற்று.

தமக்குரிய பொருள் வாய்ப்புக்கேற்ப பலவெளிகே வேலைவரினும், அவைகளை எல்லாம் இவரைப்போலவே சைவ நலங்களும் சிவபக்தியும், சிவனடியார் பக்தியும், திருத்தொண்டும், பணிவும், தமக்கென ஒரு குறிப்பின்றித் தமது தமையனருக்குரிய கருத்தே தம் கருத்தாக அவரது குறிப்பறிந்து தொண்டு பூண்டொழுகுதலே தமது பிறப்பின் குறிக்கோளாகக் கருதி ஒழுகிவரும், நமது அன்பு மிக்க செல்வச் சிரஞ்சீவி சிங்காரம் செட்டியாரவர்களிடம் ஒப்புவித்துத் தன்னுடைய காலத்தைப் பெரும்பகுதியும், சைவப் பெருநூல்களை ஆராய்தலிலும், சிவநேசர்களை உபசரித்தலிலுமே தமது காலத்தையும் கருத்தையும் செலுத்துவார். இவர் இருவகைச் செல்வமும் ஒரு வகையால் பெற்றிருந்தும், அந்தநினைவை மறந்தே தக்கோர்களை வரவேற்று அவர் குறிப்பில் நின்று பணிபுரிவார். ஏற்கெனவே, சமயதீக்ஷையும் சைவானுஷ்டானமும் பெற்று

விளங்கியதோடு நம்பால் விசேஷதீக்ஷையும் சிவபூஜையும் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு, சிறந்த சிவபூஜா துரந்தரராக விளங்கினார். பல அன்பர்களையும் சிவதீக்ஷை பெற்றுக்கொள்ளும் வண்ணம் வழிப்படுத்துவார். அங்ஙனம் சைவநெறி ஒழுகுகின்றவர்களுக்கு சைவ ஒழுக்கங்களை எடுத்தோதி நெறிப்படுத்துவார். பின்பு நாடோறும் சைவ ஒழுக்கம் தலைநின்ற சிறப்பினால் கனிந்த மனத்தராய் நிர்வாண தீக்ஷையும் பெற்றுக்கொண்டு உடையவர் பூஜையும், தில்லைமா நடராசர் பூஜையும் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு சிவாகமங்களில் வழுவாது பூஜித்துக்கொண்டு வந்தார்.

சைவ சமயிகள் தங்களுடைய நித்தியக் கிரியைகளாகிய அனுஷ்டானமும், சிவபூஜை முதலியவைகளையும் விசேஷக் கிரியைகளாகிய தீக்ஷை முதலியவைகளையும், அதன்பின் அனுஷ்டித்தற்குரியனவாகிய விவாகம் முதலிய சைவ ஷோடசக் கிரியைகளையும் சைவ நன்மக்கள் முறை பிறழாது அனுஷ்டித்தற்கு வேண்டப்படும் சிவாகம கிரியா பாதநூல்களை அச்சிட்டுப் பரப்புதல் வேண்டுமென்றும் பேரார்வம் கொண்டிருந்தார். அவரது சைவ நலங்கள், அவரது சைவநூற்புலமை, தெளிவு முதலியவை இவ்வளவினதென்று வரையறுத்துக் கூறுதல் எளிதன்று என்று கூறலே அமைவுடையதாகும். இத்துணைச் சைவத் தமிழ் நலஞ்சான்ற நமது அன்பருடைய இயல்பினை நன்கு திருவுளங் கொண்டே திருவாவடுதுறை யாதீன மகா சன்னிதானம் அவர்களும் பாராட்டியருளினார்கள், தருமபுர ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாச்சாரிய சுவாமிகளும் இவர்களுக்கு "சிவ சேனாபதி" என்ற பட்டத்தைத் தந்தருளினார்கள். மதுரை திருஞானசம்பந்த

சுவாமிகள் ஆதீன இளவரசு, ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக பரமாச்சாரிய சுவாமிகளும் "சித்தாந்தக் காவலர்" என்ற பட்டத்தைத் தந்தருளினுர்கள். குடந்தைச் சிவனடியார்கள் தமது வாழ்நாளின் சிறந்த குறிக்கோளாகக் கொண்டொழுகும் சிவஸ்தல யாத்திரைத் திருக்கூட்டத்துக்கு நமது தலைமகனுரைத் தலைவராகக் கொண்டு ஸ்தல யாத்திரையும் சிறந்த சைவப் பணிகளும் செய்து வருவாராயினர். இதனைக் கண்ட சைவப் பெரியோர்கள் இவரைச் "சைவப் புரவலர்" எனவும் அழைத்து மகிழ்ந்தனர்.

இத்துணைப் பேரன்புள்ள அன்பர் சிவத்தியானத்தினும், சித்தாந்த சைவ ஞானத்தினுலும் தனிச் சிறப்பெய்தி விளங்கித் தமது இறுதிக்காலம் வரையிலும் தமது நியமங்களில் ஒரு சிறிதும் வழுவாது இருந்து தமது 67ம் வயதில் துன்முகி ஆண்டு, ஆனி மாதம், வெள்ளிக்கிழமை 16-ம் நாள் சதய நக்ஷத்திரத்திலே (அனுபாசமாக) தில்லைவாழ் நடேசப் பெருமானுடைய திருவடியைச் சிந்தித்த மனத்தராய், தமது தம்பியாரும் குடும்பத்தினரும் சூழவிருப்பத் திருநீறணிந்து திருவைந்தெழுத் தோதி அப்பெருமானுடைய திருவடி நீழலைச் சேர்ந்தார்கள். அவரது அறிவொழுக்கங்கள், சைவ நலங்கள் தமிழ்ச் சைவப்பற்று, சமயத் தொண்டு என்றின்னோரன்ன நன்னலங்கள் கருதி அவரது நினைவு மலராக *திருநாவுக்கரசு சுவாமிகள்* திருவடிகளிலே சாத்தப்பெறும் *திருவடிப் புகழ்மாலை* இதுவாகும்.

அவர்பால் அன்புமிக்க செல்வச்சிரஞ்சீவி வித்துவான் சு. சுவர்ணகாளீச்சுரன் அவர்கள் குருமூர்த்திகளிடத்தும், தமக்குச்சிறந்த ஆசிரியராகவும், ஞானப்பிதாவாகவும்

கொண்டொழுகிய ஒழுக்கத்தின் பயனாக பல சைவப் பெருநூல்களிலிருந்தும் திருநாவுக்கரசு சுவாமிகள் திவ்ய ஸ்தோத்ரப் பாக்களை இங்ஙனம் தொகுத்தெடுத்துத்தந்தமை அவரது குருபத்திமுதலிய பண்பாட்டினை புலப்படுத்துவ்தாகச் சிறந்து விளங்குகின்றது. அவருக்கு நமது ஆசி மனப்பூர்வமாக அமைவதாகிறது. தமது சிறந்த கடப்பாடாக இதனை அச்சிட்டு உபகரிக்கின்ற நமது செல்வச் சிரஞ்சீவி சிங்காரஞ் செட்டியாரவர்களின் இந்தப்பணி தர்ம, சிவஞானப் பேரறமாக விளங்குகின்றது. அவர்களுக்கும் நமது பரிபூரணமான வாழ்த்து உரியதாகுக. ***இப்புகழ்மாலை*** எல்லாச் சிவனடியார்களாலும் ***திருநாவுக்கரசு சுவாமிகள் திருவடிக்குச் சாத்தப்பெற்று*** அதன் பயனாகிய சிவப் பிரசாதமாக அமைந்ததாதலின் சிவனடியார்களுக்கு இஃதொரு நல்விருந்தாகுக, சைவ சமயமும், சிவதர்மமும், சிவனடியார் திருக்கூட்டமும் சிறந்து விளங்குவதாகுக.

திருச்சிற்றம்பலம்



திருச்சிற்றம்பலம்.

உ
சிவமயம்

இத் தொகுப்பு நூல் நமது சைவப்புரவலராக, பெருஞ்செல்வராக சிவாநுபூதி யுடையவர்களாக இருந்து நம்மைவிட்டுப் பூதவுடம்பினின்று பிரிந்து, புகழுடம்பில் நிலைபெற்று விளங்கும் ஸ்ரீ **P. T. S.** ***குமரசாமி செட்டியாரவர்கள்*** நினைவுமலராக இன்று சிவனடியார் திருக்கூட்டத்து ஒன்பதாவது ஆண்டு விழாவிலே பல சைவ மெய்யன்பர்கள் முன்னிலையிலே வெளிவருகிறது.

குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டத்து நிரந்தரத் தலைவராக அவர்கள் இருந்து தங்களுடைய அடக்கம், பொறுமை முதலிய நற்பண்புகளால் இடையூறுகள் ஒன்றுமின்றிப் புரந்து வந்தார்கள், சிவனடியார் திருக்கூட்டத்துச் சார்பினல் தலைமையினல் திருக்கயிலாயத்தில் கூட அவர்கள் சிவகணத்துள் ஒருவராக மதிக்கப்படும் பேறு பெற்ருர்கள் என்றுகூடச்சொல்லலாம். திருக்கூட்டத்தால் அவர்களும், அவர்களால் திருக்கூட்டமும் மிகமிகப் பெருமையுற்று விளங்கியமை உலகம் நன்கு அறியும். அவர்கள் நினைவு 'என்றும் நின்று நிலவுவதாக' என்று இம்மலர் மலர்கின்றது.

இம்மலரை வெளியிடுமாறு தங்கள் கருத்தை வெளியிட்டு ஆவன செய்து தங்கள் கடமையை இச்செயலிலும் காட்டியவர்கள் அப் பெரியாருடன் பிறந்தாராக உலகம் மதிக்க, சான்ருேரெல்லாம் 'தக்கவரே' எனக்கொண்டு போற்ற விளங்குபவர்கள் அன்புமிக்க சகோதரர் திரு. P. T. S. சிங்காரம் செட்டியார் அவர்களாவார்கள்.

திரு. சிங்காரம் செட்டியாரவர்கள் தம் தமையனுருடனிருந்து, அவர்கள் காட்டிய சைவ நன்னெறி அனைத்தையும், கைக்கொண்டு, தம்முடைய செயலில் காட்டி, அவர்களைப்போலவே எளிதில் எவருக்கும் பயன்படுபவர்கள். இது முகமனன்று, புகழுமன்று, உண்மை என்பதை அறிவாரறிவார்.

இதனைத்தொகுத்து உதவியவர் திரு வித்துவான் ***சு. சுவர்ணகாளீச்சுவரன்*** அவர்கள் ஆவார். ஸ்ரீ செட்டியாரவர்கள்பால் இவ்வித்துவான் கொண்ட பேரன்பை வெளிபடுத்துமாறு இதனைச் செய்து முடித்தார்கள். திருநாவுக்கரசு சுவாமிகள் துதியாக அமைந்த நூற்றுக்கணக்கான பாடல்களைத் தங்கள் சிரமத்தைப் பாராட்டாமல் தனியாகத் தொகுத்து உதவினுர்கள். அவர்கள் செய்த உதவி மறக்கத்தக்கதன்று. மக்கள் இதனைப் பாராயண நூலாகக்கொண்டு அப்பர் சுவாமிகள் திருவடிகளில் அன்புகொண்டு நாடோறும் துதித்து வருவார்களாக.

இங்ஙனம்,

கும்பகோணம்
1-1-57

சித்தாந்தசைவமணி—
***த. ச. மீனுட்சிசுந்தரம் பிள்ளை***
திருவாவடுதுறை ஆதீனவித்துவான்.

———

உ
சிவ சிவ.

## எங்கள் தலைவர் பெருமான்

—★—

சங்கேந்து மலர்க்குடங்கைப் புத்தேளு
　　மறைக்கோவுந் தழல்கால் சூலம்
அங்கேந்து மம்மானுந் தத்தமது
　　தொழிற்றலை நின்ருற்றச் செய்தோர்
பங்கேந்தும் பெருமாட்டி விழிகளிப்ப
　　விருமுனிவர் பணிந்து போற்றக்
கொங்கேந்து மணிமன்றுட் குனித்தருளும்
　　பெருவாழ்வைக் குறித்து வாழ்வாம்.

———

உருவத்தால் உயர்ந்தவர், நீறுபூத்த நெற்றியினர், அருளொழுகு கண்ணினர், அல்லன தவிர்த்து நல்லன போற்றும் நாவினர். அக்கமணி அசைந்தாடும் மார்பினர். சிவபெருமான் திருவடியை அல்லும் பகலும் தைவரும் நெஞ்சினர், கள்ளமறியா உள்ளத்தினர், அற்றூர் அழிபசி தீர்க்கும் அறத்தினர், பீடு நடையினர், பெற்றமேறும் பெம்மானது தொண்டர் குழாத்துத் தலைவர். சிவசேனுபதியாகச் சிறப்பொடு விளங்கியவர், யார்? அவர்தாம் எங்கள் தலைவர் பெருமான், ப. தி. சோ. குமரசாமி செட்டியார் அவர்கள்.

தண்டமிழ் நாட்டில் திரு. செட்டியார் அவர்களை அறியாத தெய்வத் தமிழ்ப் புலவர்கள் இருக்க முடியாது. அவர்களை அறியாத சிவநெறி போற்றிவாழும் சைவர்கள்

இருக்க முடியாது. அவர்களை அறியாத நன்னெறிவாழும் நன்மக்கள் இருக்க முடியாது. அவர்களது புலமையையும் சிவநெறிப்பற்றையும் உணராத மதத்தலைவர்கள் இருக்க முடியாது. திரு. செட்டியார் அவர்கள் தம்மிடம் பழகுவோர் தரம் நோக்கிப்பழகுவதில் மிகவும் சிறந்தவர்கள். ஆதலால் யாவரும் போற்றுந் தன்மையில் தனிப்பெருந் தலைவர் பெருமான் ஆயினர்.

இருநிதிச் செல்வத்திற்கும் இருப்பிடமாக விளங்கிய செட்டியாரவர்கள், செல்வத்தைப் பெற்ற பயனைத்துய்க்கும் வகையில் சிறப்பொடு விளங்கினார்கள். ஈத்துவக்கும் சிறப்பை செம்மையாகப் பெற்றிருந்தார்கள். கற்றதனாலாய பயனாகிய வாலறிவன் தாளைத் தொழுவதில் தலை சிறந்து விளங்கினார்கள். இத்தகைய இயல்பான சிறப்பினைப் பெற்ற செட்டியாரவர்கள் திருக்குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டத்துத் தலைவராக 13—6—48-ல் அமர்ந்து திருக்கூட்டத்தைச் சிறப்பித்தார்கள். தாமும் சிறப்பு பெற்றார்கள், தலைமை பெற்ற அன்று முதல் தில்லையிலாடும் எல்லையில் ஆனந்தத் திருநடராசப் பெருமான் திருவடி நீழலை யடைந்த 29—6—56 வரைத் திருக்கூட்டத்தலைவராக விளங்கினார்கள். அம்மட்டோ! உருவத்தால் தளர்ந்தாலும் உள்ளத்தால் உறுதியுடைய உண்மைத் தொண்டராக விளங்கினார்கள், அது பற்றியன்றோ, அம்மையப்பன் திருவடியன்றி மற்றொன்றறியா அப்பர் அடிகளை, அடுத்தடுத்து நினைவூட்டினார்கள். கண்டார் யாவரும் அப்பர் என்றே அழைக்கும் அருஞ் சிறப்பைப் பெற்றார்கள்.

இடையருப் பேரன்பு மழைவாரும்
இணைவிழியும் உழவாரத் திண்
படையருத் திருக்கரமும் சிவபெருமான்
திருவடிக்கே பதித்த நெஞ்சும்
நடையருப் பெருந்துறவும் வாகீசப்
பெருந்தகைதன் ஞானப் பாடல்
தொடையருச் செவ்வாயும் சிவவேடப்
பொலிவழகும் துதித்து வாழ்வாம்,

என்ற திருப்பாடலுக்கு ஒரு இலக்கியமாக எங்களுடன் வாழ்ந்தார்கள். வாழ்வாங்கு வாழ்ந்த அவர்கள் சிவநெறி போற்றும் செம்மை நெறியில் எங்களை வாழ வைத்தார்கள், அத்தகைய தலைவர் பெருமான் சென்ற ஆண்டு எங்களுடன் கூடியிருந்து எட்டாவது ஆண்டு விழாவினை எழில்மிகு வகையில் நடத்திக் கொடுத்தார்கள். ஆனால் எங்களது தவக்குறையினால் ஒன்பதாவது ஆண்டு விழாவில் மலரவன் செய்த பூதவுடலுடன் காட்சியளிக்காது புகழுடம்போடு காட்சியளிக்கிறார்கள். ஏன்! இப்புத்தகத்தில் புகைப்பட உடம்போடு காட்சி கொடுக்கிறார்கள். அத்தகைய அவர்களை இந்த நன்னாளிலே நினைவு கொள்ளுகின்ற நிலையில், தலைவர்க்குத் தலைவராயும் தொண்டர்க்குத் தொண்டராயும் விளங்கிய அப்பர் அடிகளது திருவடிப் புகழ் மாலையாக இந்த நூல் திரு. செட்டியார் அவர்களது இளவலாகிய *திரு. ப, தி. சோ. சிங்காரம் செட்டியார்* அவர்களது உண்மையன்பின் உருவாக, சிவனடியார் திருக் கூட்டத்து ஒன்பதாவது ஆண்டு விழாவிலே வெளிவருகிறது. நம்மனோர்க்கு அன்பின் திறத்தைப் புலப்படுத்துகிறது,

" திருநாவுக்கரசர் திருவடிப் புகழ்மாலே " எனப் பெயர் தாங்கி திரு. செட்டியார் அவர்களது நினேவாக வெளிவருகின்ற இத் தொகுப்பு திரு. செட்டியார் அவர்களிடத்தும், என்னிடத்தும் உழுவலன்புடைய வித்துவான் திரு. சு. சுவர்ணகாளீச்சுர பிள்ளேயின் அரிய முயற்சியாகும். இம்முயற்சி மிகவும் பாராட்டிற்குரியது.

குடந்தை,
2–1–57

இங்ஙனம்,
*சு. சுந்தரேசன்,* B. A., L. T.,
தலைமையாசிரியர்.
நகராட்சி உயர்நிலைப்பள்ளி,

—※—

உ

அன்பே சிவம்.

செந்திலாண்டவன் சேவடி துணை.

—★—

## " அடக்கத்தின் திருவுரு "

காவிரி யன்னையின் கருணைப் பெருக்கும், கவினுர்ந்த கலை வெள்ளமும், கருத்தைக் கடந்த கடவுள் மணமும் திகழத் திகழ்வது இத் திருக்குடந்தை மாநகர்.

இந்நகர் ஈன்ற இணையிலாப் பெருமக்கள் பலர். அவர்கள் பல்லாற்றுலும் வல்லமை கொண்டவர்கள். அவனி புகழ வாழ்ந்தவர்கள்; வாழ்கின்றவர்கள். இத் திருநகர் எளியேனுக்கும் புகலளித்தது. ஆண்டுகள் ஒன்பது ஓடிவிட்டன. இவ்வாண்டுகளில் ஒரு சிலரையே காணவும் – கண்டு களிக்கவும் – களித்துக் கலந்து உரை யாடவும் இயல்வதாயிற்று; இயல்கின்றது.

அப்பெருமக்களுள் ஒருவரே, அருமைத் திருவினர் – அறிவுப் பெருக்கினர் - சிவம் மணக்குஞ் செல்வர் - ***அடக்கத்தின் திருவுரு*** எனத் திகழ்ந்த ***திரு. ப, தி. சோ, குமாரசாமிச் செட்டியார்*** அவர்கள். அவர்கள் பெற்ற விருதுகளும், வழங்கிய பொருளுரைகளும், செய்த சிவப்பணியும் பலப்பலவாம்.

அச்செந்தமிழ்த் திருவினரை யான் முதலில் சந்தித்தது மாணவ நிலையில், அதிலும் என் தமையனுர் திருமணப்

பந்தலில் தலைமையமர்ந்து சொற்பொழிவாற்றிய பொழுது ஞளில். அவர்கள் தலைமையில் என்னைச் சில பேசுவித்துத் தொடர்புண்டாக்கிய பெருமை துறவியெனத் தகும் துறைசைப்புலவர் - சைவமாமணி- *திரு. த. ச. மீனுட்சி சுந்தரம் பிள்ளை* அவர்களைச் சாரும். பின்னர் இவ் வூரில் பணியாற்றும் பெருநிலை யளித்த பிள்ளையவர்களும், சிவப்பணியாம் தவப்பணி புரியும் செம்மல் *திரு. சுந்த ரேசஞ் செட்டியார்* B. A.. L. T, அவர்களும் மேலும் செட்டியார் அவர்களோடு நட்பு வளர்வதற்குப் பெருந் துணையாயினர். நல்லார் நட்பாதலின் வளரும் பிறை யொப்ப ஒளிர்வதாயிற்று.

திருவும் கல்வியும் ஒருசேரப் பெறுவது இயல்வதன்று. இவ்வருமை நோக்கியே வள்ளுவப் பெருந்தகையும் 'இருவேறு உலகத்தியற்கை' என எடுத்திசைக்கின்ருர். ஆனுல் செட்டியார் அவர்கள் பொருட்செல்வம் மட்டு மின்றிப் புலமைச் செல்வமும் பொலியப் பெற்றவர். இவ்வருந் திருவினராய்த் திகழ்வோர் அரியராவர். அவர் களிலும் செல்வர்க்குச் செல்வமாகிய பணிந்த சிந்தை யினைப் பெற்ருரைக் காண்டலரிது. அத்தகைய அடக்கம், பணிந்து பழகிய பண்பு எளியேனையும் அவர்களிடத்து ஈடுபடுத்தியது. அறிவுடைப் பெருமக்கள் கலந்து களித் தமை பற்றிச் சொல்லத் தேவையில்லை.

செட்டியார் அவர்கள் வீட்டில் சென்று நுழைவேன் 'யாரது' என்ற வினு எழும். ஏனென்று குரல் கொடுப்

பேன், நடராசனென்று நாவசைப்பேன். பிள்ளைவாளா? வாருங்கள் என்பார்கள். அப்பணிவார்ந்த வரவேற்பில் வந்து நெடுநாளாயிற்றே? ஏன் அடிக்கடி வருவதில்லை? என்ற அன்பின் குழைவும் தொனிக்கும். பின்னர்தான் சென்ற கூட்டங்கள் பற்றியும் - அமர்ந்த தலைமை பற்றியும் – விரித்த விரிவுரை பற்றியும் சொல்லத் தொடங்குவார்கள். சாத்திர, தோத்திர நூல்களின் நயங்களும், நுணுக்கங்களும் எம்போல்வார் செவிகளில் தேனெனத் தேங்கிப் பாயும், நேரம் செல்வதும் தெரியாது. விடை பெறுதற்கு எழுந்தால் - சரி வாருங்கள், ஓய்வு நேரங்களில் இதுபோன்ற நம் பெரியோர்களின் பெரு நூல்களைப் படிக்கவேண்டும், படியுங்கள். அடிக்கடி வந்து செல்லுங்கள் என்ற அன்பின் ஆணையோடு அனுப்பிவைப்பார்கள்.

இத்தகைய 'அடக்கத்தின் திருவுரு' சென்ற சில நாட்களாக புகழுருப்பெற்று மன்ற வாணன் மலர் சிலம்படியில் நின்று ஒலிக்கின்றது.

இவ்வூர்ப் பொற்றாமரை வடகரைப் பொலிந்த சிவம் பெருக்கிய செல்வர் ***திரு. சு. சாமிநாத செட்டியார்*** அவர்கள் நகைச்சுவை ததும்பப் பேசுங்கால் எனது பெயரின் முதலெழுத்தாகவுள்ள வீ. ச. என்ற இரண்டையும் பொருளாகக்கொண்டு வீசம் கூறுதான் நடராசனே என்பார்கள், அக்கூறும்கூட அன்பிலாச் சிறியேனைச் செட்டியார் அவர்களும் அம்பலவாணனிடத்துக் கொண்ட

பேரன்பால், அத்திருப்பெயர்தரித்த நிலைப்பற்றிப் பாராட்டு வார்கள் என்ருல், அவர் ஆனந்தக் கூத்தனது அடிமல ரன்றிப் பிறிதொன்றும் பேணுப் பெருமையினர் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

பல்காலாற்றிய விரிவுரைகள் – சேமித்த நூல்கள் – உடன் பிறந்தாரது அன்பிற்கு எடுத்துக் காட்டாகத் திகழும் செட்டியார் அவர்களின் சிங்காரத் தம்பியார் - வழித் தோன்றல்கள் - சிவனடியார் திருக்கூட்டம் ஆகியன அவர்கள் நல்கிச் சென்ற பெருநிதிகள். அவை வளர பிறைசூடிய பெண்ணெருபாகனை எண்ணி எண்ணி ஏத்துவதன்றி வேறறியேன்.

அத் தொண்டர்தம் பெருமை அளப்பருங் கடலாகும். அதுபற்றியே சுருங்கிய காலத்துக்குள் நினைவு மலர் வெளி யிட இயலாதாயிற்று, அன்பரும் நண்பருமாய திரு. வித்துவான் சு. சுவர்ணகாளீச்சுரனுர் அவர்கள் தொகுத்த அப்பரடிகள் திருவடிப்புகழ்மாலைஎன்ற இப்பெருநூலோடு இன்னும் பல அன்பர்களின் அன்புரைகளை இணைப் பதும் இயலாதாயிற்று. இப் புகழ்மாலையினை அரிதின் முயன்று தொகுத்துள்ளமை நுணுகி ஆய்வார்க்குப் புலனும். அவர்களேஎன்னையும் சிறிது சிந்திக்கச் செய்து செட்டியார் அவர்களின் நினைவுமலரில் ஈடுபடச் செய்தனர் அதற்கு என் நன்றி.

வாழ்க சிவ நெறி! வளர்க செட்டியார் அவர்களின் புகழ்!!

குடந்தை,
2-1-57

இங்ஙனம்,
வித்துவான் *வீ. ச. நடராச பிள்ளை*,
தமிழாசிரியர்.
நகராட்சி உயர்நிலைப் பள்ளி,

உ
முருகா !

உலகில் பிறவியெடுத்த உயிர்கள் இன்பப்பேற்றை விரும்புகின்றன. இஃது இயற்கை; பேரின்பப் பெரும்பேறு எய்துவதே மக்கட்பிறவியின் மாண்பயன்.

பேரின்பப்பேறு கருதி இறைவனை அடைய அடியார்கள் முயலும் மார்க்கங்கள் நான்காம். அவற்றுள் ஒன்று தாசமார்க்கம். இதன்வாயிலாகச் சிவபெருமானைத் தம் அனுபவங்களால் நேரிற்கண்டு பேரின்பப் பெருவாழ்வுயெய்திய பெரியார் திருநாவுக்கரசு சுவாமிகள். இவர்கள் சைவசமயாச்சாரியர் நால்வருள் 'திருநின்ற செம்மையே செம்மையாகக்கொண்ட' செல்வர் ஆவர்.

அவ்வாகீசப் பெருந்தகையிடத்தே இடையருப் பேரன்புகொண்டு, ஓதி, உணர்ந்து, அவ்வழி நின்று "தேடிய மாடு நீடு செல்வமும் தில்லை மன்றுள் ஆடிய பெருமான் அன்பர்க்கு ஆவன ஆகும்" என்ற குறிப்பிலே வாழ்ந்து இன்று புகழுடம்பில் விளங்கும் பெரியார் **P. T. S. *குமரசாமி செட்டியார்*** அவர்கள் ஆவார்கள். அடியேன்பால் மிக்க அன்பு பூண்டவர்களாக நல்ஆசிமொழிகளை வழங்கினுர்கள். மற்றும்.

ஈன்றாளுமாய் எனக்கெந்தையுமாய் உடன் தோன்றினராய் இருந்தார்கள்.

"பெற்றான் இல்லை அன்னையென பிறந்தேனில்லை மகவென
மற்றோ அன்பின் வகையெல்லாம் மாணக்காட்டி"

அடியேனோடு பழகினுர்கள். அவையெல்லாம் என்னென்று எடுத்துரைப்பது.

அவர்களைப் பார்க்குந்தோறும் அவர்களோடு பேசுந்தோறும் அப்பர் சுவாமிகள் நினைவுதான் என் மனத்தில்

எழும். அவர்களோடு சிறிது நேரம் பேசிக்கொண்டிருந் தாலே போதும்; பல நூல்களைப் படித்ததன் பயன் அந்தப் பேச்சிலே ஏற்படும். பயனில்லாத பேச்சை அவர்கள் பேசி அடியேன் கேட்டதில்லை.

தமிழ், ஆங்கிலம், வடமொழி மூன்றிலும் போதிய பாண்டித்தியமுடையவர்களாகச் சிறந்து விளங்கினார்கள்.

"கலையின தகலமும் காட்சி இன்பமும்" உடையவர் கள் ஆவார்கள். முதுமையில் இளமைபெற்று என்றும் குமரனாகவே இருந்தார்கள். அவர்கள் படித்த புத்தகங்களை ஒருமுறை கண்ணோட்டமாகத் திருப்புவதாக இருந்தாலும் எத்தனையோ ஆண்டுகளாகும்.

குடந்தையில் எந்தக் கலைநிகழ்ச்சி நிகழ்வதாகஇருந்தா லும், செட்டியார் அவர்களை அதில் காணலாம். பல பெரியாருடைய சரித்திரங்களை அவர்கள் சுவைபடச் சொல்ல அடியேன் கேட்டிருக்கின்றேன்.

அடியேன் குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டத்தில் சேர்ந்து பணிசெய்யுமாறு பணித்ததும் அவர்களே. பெரி யார் அவர்கள் பல ஆண்டுகள் முயன்று பல அரிய நூல் களைத் தம் இல்லத்தில் சேமித்து வைத்திருக்கிறார்கள். மற் றவர்களைப்போல வாங்கி வைக்கப்பட்டவை அல்ல, படித்து நன்கு பயின்று பல குறிப்புகளோடு வைக்கப்பட் டவை அவை.

அவற்றைத் தமிழ் மக்கள் நன்கு பயன்படுத்திக் கொள்ளவேண்டும் என்பது அவர்களுடைய நெடு நாளைய அவா.

தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

என்பது பொய்யா மொழியன்றே. ஒரு பொது நூல் நிலையம் நிறுவிக்காண வேண்டும் என்று அவர்கள் பல காலும் சொன்னதுண்டு. அடியேனும் செட்டியார் அவர்கள் பெயராலேயே ஒரு நூல் நிலையம் ஏற்படுத்துவது சாலப் பொருத்தமுடையது என்றே நினைத்தேன்; என் விருப்பமும் நிறைவேற ஒரு வாய்ப்பு அண்மையில் ஏற்படும் என்று நம்புகிறேன்.

ஊருணி நீர் நிறைந்தற்றே யுலகவாம்
பேரறி வாளன் திரு.

என்ற வள்ளுவர் வாக்குக்கு ஒப்ப அவை மிளிர வேண்டுகிறேன். திரு. செட்டியார் அவர்களின் இளவல் திரு. P. T. S. சிங்காரம் செட்டியார் அவர்கள் தம் சகோதரரின் குறிப்பு அறிந்து நடந்து செயலாற்றி வந்தவர்கள், மொழி மேல் விழி வைத்து நின்றவர்கள், பரதன், ராமனை

"எந்தையும் ஆயும் எம்பிரானும் எம்முனும்
அந்தமில் பெருங்குணத்தி ராமன்."

என்று சொன்னதுபோல், நினைத்ததுபோல், சிங்காரம் செட்டியார் அவர்கள் தம் தமையனை நினைத்தார்கள், நினைக்கின்றார்கள்; நினைப்பார்கள்; இது புனைந்துரையன்று அதுமட்டுமல்ல,

அவர்கள் எவ்வெவரிடம் எப்படி எப்படியெல்லாம் நெருங்கிப் பழகினார்களோ அவர்களிடம் தாமும் பெருமதிப்பீந்து அவ்வாறே பழகவேண்டுமென்று நினைப்பவர்கள். அந்த நினைப்பினாலும் தம் தமையனாருடன் பழகிய பழக்கத்தாலும் ஏற்பட்ட ஒரு சிறு முனைதான் *திருநாவுக்கரசர் திருவடிப் புகழ் மாலை* என்ற

நூல் வெளிவரக் காரணமாயிற்று. சுவாமிகள் தேவாரத்தில் பல இடங்களில் தம்முடைய வரலாற்றைச் சொல்லுகின்றார்கள், அவற்றை யெல்லாம் வரலாற்று முறைப் படுத்தித் தொகுத்து இந்நூலில் அமைத்திருப்பது மிகவும் பாராட்டற்பாலது. நூலின் பிற்பகுதியில் சுவாமிகள் சம்பந்தமான கல்வெட்டுச் சான்றுகளையும் சேர்த்திருப்பது நூலுக்கு மேலும் அழகு செய்வதாகும். செட்டியார் அவர்கள் "வாகீசப் பெருந்தகைதன் ஞானப் பாடல் தொடையருச் செவ்வாயும் சிவவேடப் பொலிவழகும்" துதித்து வாழ்வாம் என்று பலகாலும் சொல்லிவந்த சொல் மலராக இது வெளிவருவது மிகப் பொருத்தமுடையது எனக் கருதுகின்றேன். இன்று மலரும் மலரானது, காய்த்துக் கனியாகிப் பயன் துய்க்க ஸ்ரீ மங்களாம்பிகா சமேத ஆதி கும்பேசப்பெருமான் திரு. செட்டியார் அவர்களுக்கு நல்வாழ்வும், நீண்ட ஆயுளும், உடல் நலமும், உளநலமும் அருளவேண்டி விழைகின்றேன்.

இந்நூலை மக்களுக்குப் பயன்படும் வண்ணம் தொகுத்து நல்ல முறையில் வெளிவரத் திருவருளும் குருவருளும் துணைசெய்ய திரு.செட்டியார்அவர்களிடம் மிக்க அன்புடையவர்களும் எனது மெய்யன்பருமான வித்துவான் திரு. சு. சுவர்ணகாளீசுவரன்,இப்பணியை குறுகிய காலத்திலே மேற்கொண்டு அழகுபெறச் செய்து முடித்துள்ளார்கள். இச்செயலுக்கு சைவ நன்மக்கள் என்றும் கடப்பாடுடையவர்கள். அவர்கள் இன்னும் பல நற்பணிகளை மேற்கொள்ளத் திருவருள் துணைசெய்ய வேண்டுகிறேன்.

வள்ளி விலாஸ்
95, பேட்டை
நாணயக்காரத்தெரு
கும்பகோணம்.

இங்ஙனம்,
அன்பு மறவாத,
**S. K. சொக்கலிங்கம்.**

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

—★—

## *சைவப் புரவலர்*

"சிரமஞ் செய்து சிவனுக்குப் பத்தராய்
பரமனைப் பல நாளும் பயிற்றுமின்
பிரமன் மாலொடு மற்றெழுந் தார்க்கெலாம்
குரவனுருரையுங் குடமூக்கிலே"

— அப்பர்.

குவலயம் போற்றும் குணமுடை நல்லடியார் வாழும் குடந்தை நன்னகரில் குறைவிலாச் செல்வராய்ச் சைவப் பேரரசு செலுத்தியவர்கள் ***திரு. ப. தி. சோ. குமர சாமி செட்டியார்*** அவர்கள் ஆவார்கள். இவர் சைவம் வளர்க்கும் சம்பந்தமூர்த்தியாய் விளங்கினார்கள். தூய வெண்ணீறு துதைந்த பொன் மேனியும் தாழ்வடமும், நாயகன் சேவடி தைவரு சிந்தையையு முடைய 'அப்பர் பெருமானே இவர்' என்றாலும் மிகையாகாது. சைவ நன்னூல்களையும், செந்தமிழ் நூற்கள் பலவற்றையும் முறையாக நல்லாசிரியர்கள் பால் கற்றுணர்ந்து, சம்பிரதாய முறை வழுவாது ஒழுகிய திருமகனாராவார். செந்தமிழ்ப் புலவர்களையும், சைவ ஆசாரியர்களையும் சிவ் ஆச்சாரியர்களையும் கல்வி பயிலும் நன் மாணக்கர்களையும் பேணி வளர்க்கும் பெருந் தகையார் ஆவர். எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பி

னும், அவற்றில் மெய்ப்பொருள் ஒன்றினையே கண்டு மகிழும் பண்பினர். பதி, பசு, பாசம் ஆகிய முப்பொருள் களையும் நன்முறையில் விரித்துக் கூறும் ஞான நன்மணி யாவார். ஞானத்தின் திருவுருவாயும், நான் மறையின் தனித்துணையாயும் விளங்கினர். கொன்றையந் தாரான் குலவு புகழினை அனைவரும் விரும்பும் வண்ணம் எடுத் துரைக்கும் பேராற்றல் வாய்ந்தவர். ஆலவாயண்ணலை யும், அம்பலவாணனையும் அனுதினமும் உள்ளேயும் புறத் தேயும் பூசிக்கும் நியம முடையவர்கள்.

சைவப் புரவலராயும், சைவத் தமிழ்மணியாயுமிருந்த தோடன்றித் திருக்குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டத் தலைவராய் அமர்ந்தார். ஆலயங்கடோறும் அடியார் குழாத்துடன் சென்று வாரமாய் வழிபடும் நலமுடையவ ரானர். சன்மார்க்க சபைகளில் தலைமையமர்ந்து விரிவுரை யாற்றினர். அம்பலவரடியார் புகழைப் பாங்குற எடுத் துரைக்கும் வல்லுனராயும், அற்றூர் அழிபசி தீர்க்கும் அண்ணலாயும் திகழ்ந்தார். "எல்லார்க்கும் நன்றும் பணி தல், அவருள்ளும், செல்வர்க்கே செல்வம் தகைத்து" என்ற வள்ளுவர் வாய்மொழிக்கிலக்கியமாய் வையகத்தில் வாழ்வாங்கு வாழ்ந்த பெரியார் ஆவர். எம்போல்வார் உள்ளக்கமலத்தில் அகலாது இருப்பவர்கள். என்பால் அளவு கடந்த அன்புடையவர். இவ்வியல்புகள் எல்லாம் ஒருங்கேயமையப் பெற்ற அரும்பெறச் செல்வருமாவர்.

சைவ சம்பிரதாயங்களையும், அனுபவ உரைகளையும், சைவத்தினையும் தமிழினையும் பேணி வளர்க்கும் நெறிகளையும், திருமுறைகளையும் திருமுறை பயின்றுரையும் வரவேற்றுபசரிக்கும் பெருந்தகைமையையும்தண்டமிழ் இலக்கியங்களின் நுணுக்கங்கள், தொனிப்பொருள்கள் முதலியவற்றை எடுத்தியம்பும் பேரார்வத்தினையும், அருந்தமிழ்ப் புலவர்களுக்கு ஆங்காங்கு எழுகின்ற ஐயங்களைப் போக்கியருளும் திறத்தினையும், சிவமணம் கமழும் தோற்றத்தினையும் திரு.செட்டியார் அவர்களிடம்கண்டதே போல இனி யார்மாட்டுக் காணவல்லேம்! விரிக்கிற் பெருகு மென்றஞ்சி இத்துடன் விடுக்கின்றேன்.

இவரதுஇளவல் திரு ப. தி சோ, சிங்காரம் செட்டியார் ஆவர். இவர் கனிந்த உள்ளமும், மலர்ந்த முகமும், பரிவுடை நோக்கும், அரனடியார்கள் பால் குழைந்த அன்பும் உள்ளவர். சிவபூசனை நாளும் புரியும் சிறப்புடையர். தன் முன்னோன் நலமே தன்னலமெனக் கொண்ட தன்னிகர் சான்றோர் ஆவர். வளர்க அவர்கள் அன்பு! தழைக அவர்கள் நலம்!

உயர்திரு. ப. தி. சோ. சிங்காரம் செட்டியார் அவர்கள் தனது அருமைத் தமையனுர் திரு. செட்டியார் அவர்கள் நினைவாக "திருநாவுக்கரசர் திருவடிப் புகழ்மாலை" என்ற அரியதொரு நூலினை, தண்டமிழ்ச் சான்றோர்கள் விரும்பிய வண்ணம், இத்திருக்குடந்தைச் சிவனடியார் திருக்கூட்ட 9-வது ஆண்டு நிறைவு விழாவிலே; பெரு

விருப்புடன் வெளியிடுகின்றார்கள். இவ் வரும்பெரும் செயலானது சைவ உலகம் போற்றிப் பாராட்டுதற்குரியது ஆகும்.

இந்நூலினை அச்சிட்டோர்க்கும், தொகுத்தோர்க்கும் எல்லாவகையிலும் உடனிருந்து தொண்டாற்றிய அன்பர்கள் அனைவர்களுக்கும், ஸ்ரீ மங்களநாயகி சமேத ஸ்ரீ ஆதி கும்பேசப்பெருமானருளால் எல்லா நலங்களும் மேன் மேலும் பெருக உண்டாகும் வண்ணம் அப்பெருமான் இணையடிகளையே அனவரதமும் சிந்திக்கின்றேன்.

குடந்தை,
2-1-57

இங்ஙனம் அன்புள்ள,
வித்துவான் *சொ. கணபதி தேசிகர்*,
தமிழாசிரியர்.

உ
சிவ சிவ.
முருகன் துணை.
திருச்சிற்றம்பலம்.

# அப்பரடிகளது வரலாற்று அகச் சான்றுகள்

—★—

## *இறைவன் ஆட்கொண்டமை* *

1 முடிகொண்டார் முளையிளவெண் திங்களோடு
மூசுமிள நாக முடனுக் கொண்டார்
அடிகொண்டார் சிலம்பலம்பு கழலு மார்ப்ப
அடங்காத முயலகனை யடிக்கீழ்க் கொண்டார்
வடிகொண்டார்ந்திலங்கும மூவலங்கைக்கொண்டார்
மாலையிடப் பாகத்தே மருவக்கொண்டார்
துடிகொண்டார் கங்காளந் தோள்மேற் கொண்டார்
சூலைதீர்த் தடியேனை யாட்கொண்டாரே.

2 பெருகுவித்தென் பாவத்தைப் பண்டெலாங்
குண்டர்கள்தஞ் சொல்லே கேட்டு
உருகுவித்தென் உள்ளத்தின் உள்ளிருந்த
கள்ளத்தைத் தள்ளிப் போக்கி
அருகுவித்துப் பிணிகாட்டி ஆட்கொண்டு
பிணிதீர்த்த ஆரூரர்தம்
அருகிருக்கும் விதியின்றி அறமிருக்க
மறம் விலைக்குக் கொண்டவாறே.

---

* ஆமயந் தீர்த்தடியேனை யாளாக் கொண்டார் அதிகை விரட்டானம் ஆட்சி கொண்டார். (தனித் திருத்தாண்டகம்)

3 ஓர்த்துள வாறு நோக்கி
உண்மையை உணராக் குண்டர் *
வார்த்தையை மெய்யென் றெண்ணி
மயக்கில்வீழ்ந் தழுந்து வேனைப்
பேர்த்தெனை யாளாக் கொண்டு
பிறவிவான் பிணிகளெல்லாம்
தீர்த்தருள் செய்தார் சேறைச்
செந்நெறிச் செல்வனாரே.

4 குண்டர் பீலிகள் கொள்ளுங் குணமிலா
மிண்டர் ரோடெனை வேறு படுத்துய்யக்
கொண்ட நாதன் குளிர்புனல் வீரட்டத்து
அண்ட னூரிட மாமாத்தூர் காண்மினே.

5 ஓதுவித் தாய்முன் அறவுரை
காட்டி அமணரொடே
காதுவித் தாய்கட்ட நோய்பிணி
தீர்த்தாய் கலந்தருளிப்
போதுவித் தாய்நின் பணிபிழைக்
கிற்புளி யம்வளாரால்
மோதுவிப் பாயுகப் பாய்முனி
வாய்கச்சி யேகம்பனே.

### நஞ்சு அமுதாகியமை

6 துஞ்சிருள் காலை மாலை
தொடர்ச்சியை மறந்தி ராதே

---

* சமண்தீர்த்தென் தன்னையாட் கொண்டார் தாமே.
(தனித் திருத்தாண்டகம்)

அஞ்செழுத் தோதில் நாளும்
அரனடிக் கன்ப தாகும்
வஞ்சனைப் பாற்சோ றாக்கி
வழக்கிலா அமணர் தந்த
நஞ்சமு தாக்கு வித்தார்
நனிபள்ளி யடிக ளாரே.

### யானை பணிந்தமை

7 மலையே வந்து விழினும் மனிதர்காள்
நிலையில் நின்று கலங்கப் பெறுதிரேல்
தலைவ னாகிய ஈசன் தமர்களைக்
கொலைசெய் யானைதான் கொன்றிடு கிற்குமே.

### கல் மிதப்பித்தமை

8 கல்லி னோடெனைப் பூட்டி யமண்கையர்
ஒல்லை நீர்புக நூக்கவென் வாக்கினால்
நெல்லு நீள்வயல் நீலக் குடியரன்
நல்ல நாமம் நவிற்றி உய்ந்தேனன்றே.

### பாமாலை பாடுவித்தமை

9 கந்தமலர்க் கொன்றையணி சடையான் தன்னைக்
கதிர்விடுமா மணிபிறங்கு கனகச் சோதிச்
சந்தமலர்த் தெரிவையொரு பாகத் தானைச்
சராசரநற் றாயானை நாயேன் முன்னைப்

பந்தமறுத் தாளாக்கிப் பணிகொண் டாங்கே
பன்னியநூல் தமிழ்மாலை பாடு வித்தென்
சிந்தைமயக் கறுத்ததிரு அருளி ஞானைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே.

10 பத்திமையாற் பணிந்தடியேன் தன்னைப் பன்னாள்
பாமாலை பாடப் பயில்வித் தானை
எத்தேவும் ஏத்தும் இறைவன் தன்னை
எம்மானை என்னுள்ளத் துள்ளேயூறும்
அத்தேனை அமுதத்தை ஆவின் பாலை
அண்ணிக்குந் தீங்கரும்பை அரனை ஆதிப்
புத்தேளைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே.

## இடபக்குறியும் சூலக்குறியும் வேண்டிப்பெற்றமை

11 பொன்னார் திருவடிக் கொன்றுண்டு
விண்ணப்பம் போற்றிசெய்யும்
என்னாவி காப்பதற் கிச்சையுண்
டேலிருங் கூற்றகல
மின்னாரு மூவிலைச் சூலமென்
மேற்பொறி மேவுகொண்டல்
துன்னார் கடந்தையுள் தூங்கானை
மாடச் சுடர்க்கொழுந்தே.

## திருவடி சூட்டவேண்டல்

12 கோவாய் முடுகி யடுதிறற்
கூற்றங் குமைப்பதன்முன்
பூவா ரடிச்சுவ டென்மேற்
பொறித்துவை போகவிடில்

மூவா முழுப்பழி மூளுங்கண்
டாய் முழங் குந்தழற்கைத்
தேவா திருச்சத்தி முற்றத்
துறையுஞ் சிவக்கொழுந்தே.

## திருவடி பெற்றமை

13 நினைந்துருகும் அடியாரை நைய வைத்தார்
நில்லாமே தீவினைகள் நீங்க வைத்தார்
சினந்திருகு களிற்றுரிவைப் போர்வை வைத்தார்
செழுமதியின் தளிர்வைத்தார் சிறந்து வானோர்
இனந்துருவி மணிமகுடத் தேறத் துற்ற
இனமலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப் பில்கி
நனைந்தனைய திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே.

14 உலந்தார்தம் அங்கம் அணிந்தான் கண்டாய்
உவகையோ டின்னருள்கள் செய்தான் கண்டாய்
நலந்திகழுங் கொன்றைச் சடையான் கண்டாய்
நால்வேதம் ஆறங்க மானான் கண்டாய்
உலந்தார் தலைகலனுக் கொண்டான் கண்டாய்
உம்பரார் தங்கள் பெருமான் கண்டாய்
மலர்ந்தார் திருவடியென் தலைமேல் வைத்த
மழபாடி மன்னும் மணாளன் றானே.

## சிவபிரான் அருட்குரவராக வந்து ஞானமுழுக்கு செய்வித்தமை

15 குலங்கெடுத்துக் கோள்நீக்க வல்லான் றன்னைக்
குலவரையன் மடப்பாவை யிடப்பாலானை

மலங்கெடுத்து மாதீர்த்தம் ஆட்டிக் கொண்ட
மறையவனைப் பிறைதவழ்செஞ் சடையினனைச்
சலங்கெடுத்துத் தயாமூல தன்ம மென்னுந்
தத்துவத்தின் வழிநின்று தாழ்ந்தோர்க்கெல்லாம்
நலங்கொடுக்கும் நம்பியை நள்ளாற்றானை
நானடியேன் நினைக்கப் பெற்றுய்ந்தவாறே.

## படிக்காசு பெற்றமை

16 பாடிப் பெற்ற பரிசில் பழங்காசு
வாடி வாட்டந் தவிர்ப்பா ரவரைப்போல்
தேடிக் கொண்டு திருவாய்மூர்க் கேயென
ஓடிப் போந்திங் கொளித்தவா றென்கொலோ.

## திருக்கதவு திறக்கப் பாடினமை

17 திறக்கப் பாடிய என்னினுஞ் செந்தமிழ்
உறைப்புப் பாடி யடைப்பித்தா ருந்நின்றார்
மறைக்க வல்லரோ தம்மைத் திருவாய்மூர்ப்
பிறைக்கொள் செஞ்சடை யாறிவர் பித்தரே.

## திருவாய்மூருக்கு வாவென அழைத்தமை

18 எங்கே யென்னை யிருந்திடந் தேடிக்கொண்
டங்கே வந்தடை யாள மருளினார்
தெங்கே தோன்றுந் திருவாய்மூர்ச் செல்வனார்
அங்கே வாவென்று போனா ரதென்கொலோ

### *சமண சமயத்திலிருந்தமைக்கு வருந்துதல்* *

19 பாசிப்பல் மாசு மெய்யர் பலமிலாச் சமண ரோடு
நேசத்தா லிருந்த நெஞ்சை நீக்குமா றறியமாட்டேன்
தேசத்தார் பரவி யேத்துந் திருவையா றமர்ந்த தேனே
வாசத்தால் வணங்க வல்லார் வல்வினை மாயு மன்றே.

20 பல்லுரைச் சமணரோடே பலபல கால மெல்லாஞ்
சொல்லிய செலவு செய்தேன் சோர்வனுன் னினைத்த போது
மல்லிகை மலருஞ் சோலைத் திருவையா றமர்ந்த தேனே
எல்லியும் பகலு மெல்லாம் நினைந்தபோதினியவாறே.

21 திருந்தா அமணர்தந் தீநெறிப் பட்டுத் திகைத்துமுத்தி
தருந்தா ளிணைக்கே சரணம்புகுந்தேன் வரையெடுத்த
பொருந்தா அரக்க னுடல்நெரித் தாய்பா திரிப்புலியூர்
இருந்தா யடியே னினிப்பிற வாமல்வந் தேன்று கொள்ளே,

### *ஐயாறு அடைந்தவிதம்*

22 மாதர்ப் பிறைக்கண்ணி யானை
மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப்
புகுவா ரவர்பின் புகுவேன்

* 43இடங்களில் வருந்துகின்றார். தன்னை ஆண்ட முறைமை 15 இடங்களில் கூறப்பட்டுள்ளது. காலச்சுருக்கம் பற்றி சிலவே பதிப்பிக்கப்பெற்றன.

யாதுஞ் சுவடு படாமல்
ஐயா றடைகின்ற போது
காதன் மடப்பிடி யோடுங்
களிறு வருவன கண்டேன்.
கண்டே னவர்திருப் பாதங்
கண்டறி யாதன கண்டேன்.

## இறைவன் திருவடியடைந்தமை

23 எண்ணுகேன் என்சொல்லி எண்ணுகேனோ
எம்பெருமான் திருவடியே எண்ணினல்லால்
கண்ணிலேன் மற்றோர் களைகண் இல்லேன்
கழலடியே கைதொழுது காணின் அல்லால்
ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்
ஒக்க அடைக்கும்போ துணர மாட்டேன்
புண்ணியா உன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே.

திருச்சிற்றம்பலம்.

திருவருளால் முற்றியது.

உ
செந்திலாதிபன் துணை.
திருச்சிற்றம்பலம்

# திருநாவுக்கரசர்

## திருவடிப்புகழ்மாலை

—*—

## திருமுறைகள்.

***ஏழாந்திருமுறை***

### *சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்.*

திருச்சிற்றம்பலம்.

1 திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
***திருநாவுக் கரையன்***றனடியார்க்கு மடியேன்
பெருநம்பி குலச்சிறைதன் னடியார்க்கு மடியேன்
பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கு மடியேன்
ஒருநம்பி யப்பூதி யடியார்க்கு மடியேன்
ஒலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கர்க் கடியேன்
அருநம்பி நமிநந்தி யடியார்க்கு மடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே.

2 நற்றமிழ் வல்ல ஞானசம் பந்தன்
***நாவினுக் கரையன்*** நாளைப் போவானுங்
கற்ற சூதனற் சாக்கியன் சிலந்தி
கண்ணப்பன் கணம் புல்லனென் றிவர்கள்
குற்றஞ் செய்யினும் குணமெனக் கருதுங்
கொள்கை கண்டுநின் குரைகழ லடைந்தேன்
பொற்றிரண் மணிக் கமலங்கள் மலரும்
பொய்கை சூழ்திருப் புன்கூரு ளானே.

3 அணிகொள் ஆடையம் பூண்அணி மாலை
அமுது செய்தமு தம்பெறு சண்டி
இணைகொள் ஏழெழு நூறிரு பனுவல்
ஈன்ற வன்**திரு நாவினுக் கரையன்**
கணைகொள் கண்ணப்பன் என்றிவர் பெற்ற
காத லின்னருள் ஆதரித் தடைந்தேன்
திணைகொள் செந்தமிழ் பைங்கிளி தெரியும்
செல்வத் தென்றிரு நின்றியூ ரானே.

4 நல்லிசை ஞானசம் பந்தனும் **நாவுக்**
**கரசரும்** பாடிய நற்றமிழ் மாலை
சொல்லிய வேசொல்லி ஏத்துகப் பானைத்
தொண்ட னேன்அறி யாமை அறிந்து
கல்லியல் மனத் தைக்கசி வித்துக்
கழலடி காட்டிஎன் களைகளை அறுக்கும்
வல்லியல் வானவர் வணங்கநின் றானை
வலிவலந் தனில் வந்துகண் டேனே.

5 **நாவின்மிசை யரையன்னொடு** தமிழ்ஞானசம் [பந்தன்
யாவர்சிவன் அடியார்களுக் கடியான்அடித் தொண்டன்
தேவன்திருக் கேதாரத்தை ஊரன்னுரை செய்த
பாவின் தமிழ் வல்லார்பர லோகத்திருப் பாரே.

திருச்சிற்றம்பலம்

## ஒன்பதாம் திருமுறை

### பூந்துருத்தி நம்பிகாட நம்பி திருவிசைப்பா.

6 அல்லியம் பூம்பழனத் தாமூர்நா வுக்கரசைச்
செல்ல நெறிவகுத்த சேவகனே தென்றில்லைக்
கொல்லை விடையேறி கூத்தா டரங்காகச்
செல்வ நிறைந்த சிற்றம்பலமே சேர்ந்தனையே.

திருச்சிற்றம்பலம்.

## பதினோராந் திருமுறை

### திருத்தொண்டர் திருவந்தாதி

7 (நம்பியாண்டார்நம்பி)

நற்றவ னல்லூர்ச் சிவன்றிருப் பாதந்தன் சென்னி வைக்கப்
பெற்றவன் மற்றிப் பிறப்பற வீரட்டர் பெய்கழ ற்ருள்
உற்றவ னுற்றவிட மடையா ரிடவொள் ளமு தாத்
துற்றவ னூரி னுவுக் கரசெனுந் தூம ணியே,

8 மணியினை மாமறைக்காட்டு மருந்தினை வண்மொழி
திணியன நீள்கத வந்திறப் பித்தன தென்கடலிற் [யால்
பிணியன கன்மிதப் பித்தன சைவப் பெருநெறிக்கே
அணியன நாவுக் கரையர் பிரான்றன் அருந்தமிழே.

### திருநாவுக்கரசுதேவர் திருவேகாதசமாலை

(நம்பியாண்டார்நம்பி)

9 புலனோ டாடித் திரிம னத்தவர்
பொறிசெய் காமத் துரிச டக்கிய
புனித நேசத் தொடுத மக்கையர்
புணர்வி னலுற் றுரைசெ யக்குடர்
சுலவு சூலைப் பிணிகொ டுத்தொளிர்
சுடுவெ ணீறிட் டமண கற்றிய
துணிவி னுன்முப் புரமெ ரித்தவர்
சுழலி லேபட் டிடுத வத்தினர்
உலகின் மாயப் பிறவி யைத்தரும்
உணர்வி லாவப் பெரும யக்கினை
ஒழிய வாய்மைக் கவிதை யிற்பல
உபரி பாகப் பொருள்ப ரப்பிய

அலகின் ஞானக் கடலி டைப்படும்
அமிர்த யோகச் சிவவொ ளிப்புக
வடிய ரேமுக் கருளி னைச்செயும்
அரைய தேவத் திருவ டிக்களே.

10 திருநாவுக் கரசடி யவர்நாடற் கதிநிதி
தெளிதேனெத் தினியசொன் மடவாரூர்ப் பசிமுதல்
வருவானத் தரிவையர் நடமாடிச் சிலசில
வசியாகச் சொலுமவை துகளாகக் கருதிமெய்
யுருஞானத் திரண்மன முருகாநெக் கழுதுகண்
உழவாரப் படைகையி லுடையான்வைத் தனதமிழ்
குருவாகக் கொடுசிவ னடிசூடத் திரிபவர்
குறுகார்புக் கிடர்படு குடர்யோனிக் குழியிலே.

11 குழிந்துசுழி பெறுநா பியின்கொண் மயிர்நிரையார்
குரும்பை முலையிடையே செலுந்தகை நன்மடவார்
அழிந்தபொசி யதிலே கிடந்திரவு பகல்நீ
அளைத் தயருமதுநீ அறிந்திலைகொல் மனமே
கழிந்தகழி கிடுநா ளினங்கிதய நெகவே
கசிந்திதய மெழுநா றரும்பதிக நிதியே
பொழிந்தருளு திருநா வினெங்களர சினையே
புரிந்து நினையிதுவே மருந்துபிறி திலையே.

12 இலமா டென்றிடர் பரியா ரிந்திர
னேயொத் துறுகுறை வற்றுலும்
நிலையா திச்செல்வம் எனவே கருதுவர்
நீள்சன் மக்கட லிடையிற்புக்
கலையார் சென்றர னெறியா குங்கரை
அண்ணப் பெறுவர்கள் வண்ணத்திண்
சிலைமாடந்திகழ் புகழா மூருறை
திருநா வுக்கர சென்போரே.

13 என்பட்டிக் கட்டிய விந்தப்பைக் குரம்பையை
யிங்கிட்டுச் சுட்டபி னெங்குத்தைக் குச்செலுமிது
முன்பிட்டுச் சுட்டிவ ருந்திக்கெத் திக்கென
மொய்ம்புற்றுக் கற்றறி வின்றிக்கெட் டுச்சில
வன்பட்டிப் பிட்டர்கள் துன்புற்றுப் புத்தியை
வஞ்சித்துக் கத்திவி ழுந்தெச்சுத் தட்டுவர்
அன்பர்க்குப் பற்றிலர் சென்றர்ச்சிக் கின்றிலர்
அந்தக்குக் கிக்கிரை சிந்தித்தப் பித்தரே.

14 பித்தரசு பதையாத கொத்தைநிலை யுளதேவு
பெட்டியுரை செய்து சோறு சுட்டியுழல் சமண்
கைத்தரசு பதையாத சித்தமொடு சிவபூசை [வாயர்
கற்றமதி யினஞேசை யித்தரசு புகழ்ஞால
முத்திபெறு திருவாளன் எற்றுணையின்
மிதவாமல் கற்றுணையில் வருமாதி
பத்தரசு வசைதீர வைத்ததன தமிழ்மாலை
பற்பலவு மவையோத நற்பதிக நிதிதானே

15 பதிகமே ழெழு நூறு பகருமா கவியோகி
பரசுநா வரசான பரமகா ரணவீசன்
அதிகைமா நகர்மேவி யருளிஞ லமண்மூடர்
அவர்செய்வா தைகள்தீரும் அனகன்வார் கழல்சூடி
நிதியரா குவர்சீர்மை யுடையரா குவர்வாய்மை
நெறியரா குவர்பாவம் வெறியரா குவர்சால
மதியரா குவரீச னடியரா குவர்வானம்
உடையரா குவர்பாரின் மனிதரா னவர்தாமே.

16 தாமரைநகு மகவிதழ் தருவன
சாய்பெறுசிறு தளிரினை யனையன
சார்தருமடி யவரிடர் தடிவன
தாயினுநல கருணையை யுடையன

தூமதியினை யொருபது கொடுசெய்த
சோதியின்மிகு கதிரினை யுடையன
தூயனதவ முனிவர்கள் தொழுவன
தோமறுகுண நிலையின தலையின
வோமரசினை மறைகளின் முடிவுகள்
ஒலிடுபரி சொடுதொடர் வரியன
வோவறு முணர் வொடுசிவ வொளியனை
யூறியகசி வொடு கவி செய்தபுகழ்
ஆமரசுய ரகநெகு மவருள
ஞரரசதி கையினர னருளவ
ஞமரசுகொ ளரசெனை வழிமுழு
தாளரசுத னடியிணை மலர்களே.

17 அடிநாயைச் சிவிகைத் தவிசேறித் திரிவித்
தறியாவப் பசுதைச் சிறியோர்பாற் செறியுங்
கொடியேனுக் கருளைத் திருநாவுக் கரசைக்
குணமேருத்தனைவிட் டெனையா மொட்டகல்விற்
பிடியா ரப்பெறுதற் கரிதாகச் சொலுமப்
பிணநூலைப்பெருகப் பொருளாகக்கருதுஞ்
செடிகா யத்துறிகைச் சமண்மூடர்க் கிழவுற்
றதுதேவர்க் கரிதச் சிவலோகக் கதியே.

18 சிவசம் பத்திடைத் தவஞ்செய்து
திரியும் பத்தியிற் சிறந்தவர்
திலகன் கற்றசிட்டன் வெங்தொளிர்
திகழும் பைம்பொடித் தவண்டணி
கவசம் புக்குவைத் தரன்கழல்
கருதுஞ் சித்தனிற் கவன்றிய
கரணங் கட்டுதற் கடுத்துள
களகம் புக்கநற் கவந்திய

னவசம் புத்தியிற் கசிந்துகொ
டழுகண் டத்துவைத் தளித்தனன்
அனகன் குற்ற மற்ற பண்டிதன்
அரசெங்கட் கொர்பற் றுவந்தறு
பவசங் கைப்பதைப் பரஞ்சுடர்
படிறின் றித்தனைத் தொடர்ந்தவர்
பசுபந் தத்தினைப் பரிந்தடு
பரிசொன் றப்பணிக்கு நன்றுமே.

19 நன்றுமாதர நாவினுக் கரசடி நளினம்வைத்துயி [னல்லால்
ஒன்றுமாவது கண்டிலம் உபாயமற்றுள்ளன வேண்டோமால்
என்று மாதியும் அந்தமும் இல்லதோ ரிகபரத்திடைப் பட்டுப்
பொன்றுவார் புகுஞ் சூழலில் புகேம் புகிற் பொறியிலேம் புலனேடே.

திருச்சிற்றம்பலம்.

## *பன்னிரண்டாந்திருமுறை*

### *பெரியபுராணம்*
(சேக்கிழார் பெருமான்)

20 ***திருநாவுக்கரசு***வளர் திருத்தொண்டின் நெறிவாழ
வருஞானத் தவமுனிவர் வாகீசர் வாய்மைதிகழ்
பெருநாமச் சீர்பரவ லுறுகின்றேன் பேருலகில்
ஒருநாவுக் குரைசெய்ய வொண்ணுமை யுணராதேன்.

21 "உடைய அரசுலகேத்தும் உழவாரப்படையாளி
விடையவர்க்குக் கைத்தொண்டு விரும்புபெரும் பதியைமிதித்

தடையுமதற் கஞ்சுவன்'' என்றந் நாளில்புகுதாதே
மடைவளர் தண்புறம்பணையில் சித்தவடமடம்
புகுந்தார்.

22 திலகவதியார் பிறந்து சிலமுறையாண்டகன்றதற்
[பின்
அலகில்கலைத் துறை தழைப்ப அருந்தவத் தோர்நெறி
[வாழ
உலகில் வரும் இருள் நீக்கி ஒளி விளங்கு கதிர்போல
மலரும் மருணீக்கியார் வந்தவ தாரம் செய்தார்.

23 மேவுற்ற இவ்வேலையில் நீடிய சீர் வீரட்டம்
அமர்ந்த பிரானருளால்,
பாவுற்றலர் செந்தமிழின் சொல்வளப் பதிகத்
தொடைபாடிய பான்மையினல்
நாவுக்கரசென்றுல கேழினும் நின் நன்னுமம்
நயப்புற மன்னுக'என்று
யாவர்க்கும் வியப்புற மஞ்சுறைவா னிடையேஒரு
வாய்மை எழுந்ததுவே.

24 மையற் றுறை ஏறி மகிழ்ந்தலர் சீர் வாகீசர்
மனத்தொடு வாய்மையுடன்
மெய்யுற்ற திருப்பணி செய்பவராய் விரவுஞ்சிவ
சின்னம் விளங்கிடவே
எய்துற்ற தியானம் அறு வுணர்வும் ஈரின்றி
எழுந்திருவாசகமும்
கையில் திகழும் உழவாரமுடன் கைக்கொண்டு
கலந்து கசிந்தனரே.

25 தூயவெண்ணீறு துதைந்த பொன்மேனியுந் தாழ்வ
டமும்
நாயகன் சேவடி தைவருஞ் சிந்தையும் நைந்துருகிப்

பாய்வதுபோலன்புநீர்பொழிகண்ணும் பதிகச்செஞ்
சொல்
மேயசெவ்வாயும் உடையார் புகுந்தனர் வீதியுள்ளே.

26 அருட்பெரு மகிழ்ச்சி பொங்க "அன்னம்பா
லிக்கும்' என்னும்
திருக்குறுந்தொகைகள்பாடித்திருவுழ வாரங்கொண்டு
பெருத்தெழு காதலோடும் பெருந்திருத் தொண்டு
செய்து
விருப்புறு மேனிகண்ணீர் வெண்ணீற்றுவண்டலாட.

27 மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாருந் திருவடிவும்
மதுரவாக்கில்
சேர்வாகுந் திருவாயில் தீந்தமிழின் மாலைகளுஞ்
செம்பொற்றூளே
சார்வான திருமனமும் உழவாரத் தனிப்படையும்
தாமுமாகிப்
பார்வாழத் திருவீதிப் பணி செய்து பணிந்தேத்திப்
பரவிச்செல்வார்.

28 தொழுதுபல வகையாலும் சொற்றொடை வண்
தமிழ்பாடி
வழுவில் திருப்பணி செய்து மனங்கசிவுற்
றெப்பொழுதும்
ஒழுகிய கண் பொழி புனலும் ஓவாது சிவன்தாள்கள்
தழுவிய சிந்தையில் உணர்வுந் தங்கிய நீர்மையிற்
சரித்தார்.

29 சிந்தை யிடையறு அன்பும் திருமேனி தன்னில்
அசைவும்
கந்தை மிகையாங் கருத்தும், கைஉழவாரப் படையும்

வந்திழி கண்ணீர் மழையும் வடிவிற்பொலி திருநீறும்
அந்தமிலாத் திருவேடத் தரசும் எதிர் வந்தணைய.

30 அருட்பெருகு தனிக்கடலும் உலகுக் கெல்லாம்
அன்புசெறி கடலுமாம் எனவும் ஓங்கும்
பொருட்சமய முதற்சைவ நெறிதான் பெற்ற
புண்ணியக்கண் இரண்டெனவும் புவனம் உய்ய
இருட்கடுவுண் டவரருளும் அகிலம் எல்லாம்
ஈன்றுள்தன் திருவருளும் எனவுங் கூடித்
தெருட்கலை ஞானக்கன்றும் அரசுஞ்சென்று
செஞ்சடை வானவர்கோயில் சேர்ந்தார் அன்றே

31

மண்முதலாம் உலகேத்த மன்னுதிருத் தாண்டகத்தைப்
"புண்ணியாஉன்னடிக்கே போதுகின்றேன்" எனப்புகன்று
நண்ணரிய சிவானந்த ஞானவடி வேயாகி
அண்ணலார் சேவடிக்கீழ் ஆண்டஅரசு எய்தினர்.

திருச்சிற்றம்பலம்

---

## சாத்திரங்கள்

---

### *திருக்களிற்றுப்படியார்*

32 கொல்கரியின் நீற்றறையின் நஞ்சிற் கொலை தவிர்த்தல்
கல்லே மிதப்பாய்க் கடல் நீந்தல்—நல்ல
மருவார் மறைக் காட்டில் வாசல்திறப்பித்தல்
*திருவாமூ ராளி செயல்*

33 பாலை நெய்தல் பாடியதும் *பாம்பொழியப் பாடியதும்*
காலனை அன் றேவிக் கராங்கொண்ட—பாலன்
மரணந் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நந்தம்
கரணம் போல் அல்லாமை காண்.

### *சைவசமயநெறி*

34 பரித்தரிப்பாம் பாசம் பரமசிவன் பாதந்
தரித்துய்ந்த வாகீசர் தாள்

### *பரமத திமிரபானு*

35 தரித்திடுவா மெம்முட் சிவனடிதன் னுச்சி
பரித்தசொல் வேந்தன் பதம்

### *சங்கற்ப நிராகரணம்*

36 வாக்கியலி னாலே மறைவனத்து வன்கதவை
நீக்கினன்தாள் நீங்காதென் நெஞ்சு

### *இறைவனூற்பயன்*

37 வாக்கியலால் வன்கதவை மாமறைக் காட்டிற்றிறந்த
வாக்கிறைவன் பாதமினை வாம்

### *சிந்தாந்த தரிசனம்*

38 நின் றதிருத் தாண்டகத்தா னீடுயிர் பொய்ப் போதமற
அன் றுரைத்தோன் தாளகம்வைப் பாம்

### *உருத்திராக்க விசிட்டம்*

39 கொன்னதிகை யீசன்முன் கூற்று யினவாறே
யென் னுமிசை பாடி யிசையுடனே–யன்னவனால்

இன்னலொரீஇ வாகீச னென்னும் பெயர்பெற்றான்
தன்னடிவைப் பாமெந் தலை

### *சிவபுண்ணியத்தெளிவு*

40 திரைபொரு கடலிடைச் செறித்துத் தீயமண்
புரையினர் விடுசிலை புணைய தாகவே
உரைதரு மைந்தெழுத் துணர்த்து பாடலாற்
கரைவரு மப்பர்தாள் கருது வாமரோ.

### *சத்தியஞானபோத ஆசிரியப்பா*

41 கேவல ஞானக் கிழவனு ளுடைப்
பிள்ளை ***நா வரசு*** பேரா ரூரன்
அரதன வாக்கிய னருந்தமிழ் மூலன்
சீவன் முத்தர் திருவாய் மலர்ந்த
நூல்பவ நோய்க்கு நுண்ணிய மருந்தே

### *சிவானந்தமாலை*

42 சொற்கோவுந் தோணிபுரத் தோன்றலுநஞ்சுந்தரனுஞ்
சிற்கோல வாதவூர்த் தேசிகனு—முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறைநூல் தானெங்கே
எந்தைபிரா னஞ்செழுத்தெங் கே

### *நிஷ்டானுபூதி*

43 அடிபணிவே னுமைசொர்க்கத்
தமுதையயின் றினியகவி யமுதந் தந்தோன்
அடிபணிவேன் ***பவக்கடலு மூவர்க்கடலுங்***
***கடந்தவாக் கரசின் செங்கேழ்***
***அடிபணிவேன்*** பரவைபாற் பரசிவனைத்
தூதாக அனுப்பு வித்தோன்
அடிபணிவேன் திருவாத வூரடிகள்
புகழேத்தி யன்பின் மாதோ.

———

# புராணங்கள்

—::—

## உமாபதி சிவாச்சாரிய சுவாமிகள் செய்தருளியவை

### 44 கோயிற்புராணம்

திருஞான சம்பந்தர் செய்யதிரு வடிபோற்றி
*அருணவுக் கரசர்பிரா* னலர்கமல பதம்போற்றி
கருமாள வெமையாளுங் கண்ணுதலோன் வலிந்தாண்ட
பெருமாள்பூங் கழல்போற்றி பிறங்கியவன் பர்கள்போற்றி

### சேக்கிழார் நாயனர் புராணம்

45
பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
*யாழிமிசைக் கன்மிதப்பிலணை ந்தபிரா*னடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
யூழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி

### கந்தபுராணம்

(கச்சியப்பசிவாச்சாரியசுவாமிகள்)

46 பொய்யுரை நூல்சில புகலுந் தீயமண்
கையர்கள் பிணித்துமுன் கடல கத்திடு
வெய்யகற் ரேணியாய் மிதப்ப மேற்படு
துய்யசொல் லரசர்தாள் தொழுது போற்றுவாம்.

## பரஞ்சோதிமுனிவர் செய்தருளியவை

### திருவிளையாடற்புராணம்

47 அறப்பெருஞ் செல்வி பாகத் தண்ணலஞ் செழுத்தா [லஞ்ச
மறப்பெருஞ் செய்கை மாறு வஞ்சக ரிட்டநீல
நிறப்பெருங் கடலும் யார்க்கு நீந்துதற் கரியவேழு
பிறப்பெனுங் கடலுநீத்த பிரானடி வணக்கஞ் செய்வாம்.

### வேதாரணியப்புராணம்

48 முந்துவிட வூன்படைக்கன் றசையா தோங்கு
மும்மதமும் பொழிகளிற்றுன் முறிபடாமல்
தந்தவொரு நீற்றரையாந் தழல் தாவாமற்
தடங்கடல்தான் கொண்டிடவுந் தாழ்வுறுமல்
நிந்தையமண் கொடுங்கான நீக்கி மேன்மை
நிகழதிகை வீரவன நின்றிலங்கி
வந்துசிவ சமயநெறி நீழலிட்டு
வளர்ந்தோங்கு நாவரசை வணங்கல் செய்வாம்.

## நிரம்ப வழகிய தேசிகசுவாமிகள் அருளிச்செய்தவை

(சேதுபுராணம்)

49 தேவரையு முனிவரையுந் துளவ மார்பிற்
றிருவரையுங் குரவரையுஞ் செல்வ மிக்கோர்
யாவரையு மேவல்கொளு நெற்றி நாட்டத்
திறைவரைமுன் னிகந்திருந்த வெண்ணந்தோன்றச்
சேவரையு நெடுங்கொடியின் றகைமை யெல்லாத்
திசைவரையுஞ் செலத்தமிழின் செய்யுள் பாடு

நாவரையர் புகழ்மொழிகள் வரைந்து கூறி
நயந்தவர் செய் திருத்தொண்டு வியந்து வாழ்வாம்

## திருப்பரங்கிரிபுராணம்

50 நீறு குளிர மேனியிலே நீறுபூசி நெடுங்கிடங்கில்
ஊறு கடன்மேற் கல்லிறுக வூறு படாது மிதந்தருளி
ஆறு தரித்த கடவுளைநல் லாறு தருதி யெனுந்தமிழின்
வீறு பகரு நாவினுக்கு வேந்தர் பாதம் பணிவாமே

## சிவஞானமாதவர் அருளிச்செய்த
## காஞ்சிபுராணம்

51 இடையறுப் பேரன்பு மழைவாரும்
இணைவிழியும் உழவாரத் திண்
படையறுத் திருக்கரமுஞ் சிவபெருமான்
திருவடிக்கே பதித்த நெஞ்சும்
நடையறுப் பெருந்துறவும் வாகீசப்
பெருந்தகைதன் ஞானப் பாடல்
தொடையறுச் செவ்வாயுஞ் சிவவேடப்
**பொலிவழகும் துதித்து** வாழ்வாம்.

## கச்சியப்ப முனிவர் செய்தருளியவை
## பேரூர்ப்புராணம்

52 விஞ்சை கற்பன வேறிலை விடையவன் பதங்கள்
அஞ்சு மேயென வறியவெவ் வுலகுங்கற் புணையா
நெஞ்சு துட்கெனு நெடும்புனல் வேலையும் பிறவி
வஞ்ச வேலையு நீந்திய மன்னனைப் பணிவாம்.

## திருவானைக்காப்புராணம்

53 கொண்ட லாடிய விழிகளுங் கோலவெண்ணீற்று
வண்ட லாடிய மேனியு மல்குமா னந்த
முண்ட தாங்கெதி ரெடுத்தன வோதுசெம் பாட்டுங்
கண்டு கேட்டரு ளுவினுக் கரசினைக் கலப்பாம்,

## பூவாளூர்ப்புராணம்

54 கருங்கடலிற் றமையழுந்தப் பெருஞ்சிலையி
னுறப்பிணித்துக் கண்ணே டாமை
ஒருங்குறுத்த அமணர்குழாந் துயர்க்கடலின்
ஒருங்கழுந்த வுமிழ்பைந் தேறல்
நெருங் கிதழ்ப்பொற் கொன்றையும் வெண்
தும்பையும்பா சறுகுமுடி நிலவவைத்தார்
தருங்கருணைக் கடன் முழுகிக் கருங்கடலின்
மிதந்தவரைச் சரணஞ் சார்வாம்.

## சம்பந்தசரணாலயசுவாமிகள் அருளிய கந்தபுராணச் சுருக்கம்

55 வெங்குருவிற் சற்குருவா யுதித்துக் கூடன்
மீனவன்மேல்வினைதீர்த்தோன்விரைத்தாள்போற்றி
துங்கமுறும் அலைகடலிற் சிலைய தான
தோணியில்வந் தவன்பாத தூளி போற்றி
எங்கள்பிரான் றனையிருளிற் பரவை வாசற்
கேவல் கொண்டோன் பதப்பதும விருதாள்
புங்கவர்சூழ் திருவாத வூரில் வந்த [போற்றி
புண்ணியனு ரிணையடிகள் போற்றி போற்றி.

—★—

## கொட்டையூர், சிவக்கொழுந்து தேசிகரவர்கள் இயற்றியவை

—::—

### மருதவனபுராணம்

56 வடமருவு தென்னிழலிற் கருணைவடி
வாய்விளங்கு வரதன் போல
விடமமிர்த மெனப்பருகிச் சூலந்தோண்
மிசையேற்று விடைமேற் கொண்டு
தடமருவு தரணியிடைத் திகழ்ந் திடுவா
கீசர்பத சரோரு கத்தைத்
திடமுறுமன் பொடு தினமும் சிந்திப்போந்
துயர்களெல்லாஞ் சிந்திப்போமால்.

### திருநல்லூர்ப் பெருமணப்புராணம்

57 பறிதலைப்பா யுடைக் கொடிய பாதகரா
கியகுண்டர் பல்லோர் கூடி
எறிதிரையார் கலியினிடைச் சிலையினெடு
பிணித்திட லு மிலங்கு மேன்மை
நெறிதருமஞ் செழுத்தினைக் கொண் டதுகடந்தோன்
மலரடியை நினைந்து மன்னும்
பிறவியெனப் பகர்ந்திடுநீள் கடலதனைக்
கடந்திடுவாம் பெரிது மன்றே.

## *மகாவித்வான் மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் செய்தவை.*

---

### *திருக்குடந்தைப்புராணம்*

58 ஒருகவி மீட்பான் காலற் கோலையொன் றெழுதி யச்சம்
பெருகவுந்தோற்றியுய்த்தபெருஞ்சிலை*யிராமனுணத்*
தருகவப் பூதிமைந்தன் றனை யெனக் கால காலற்
கருகலில் பதிகம்பாடி யருளினேற் கன்பு செய்வாம்.

### 59 *திருநாகைக்காரோணப்புராணம்*

எழுபது வெள்ளஞ்சேனை யெடுத்திடு பலகற் கொண்டு
செழுமணிப் பரவை யொன்றே கடந்தவெஞ்
*சிலையோனுண*
வழுவம ணிடுகல் லொன்ருன் மறிகடல் பிறவி வேலை
முழுவதுங் கடந்த வெங்கண் முதல்வனுக் கன்புசெய்வாம்

### *விளத்தொட்டிப்புராணம்*

60 மணிவடஞ் சிருக்கு நேமி வரிவளை மலர்க்கை
தாங்கிப்
பணிபடு மதனுற் பந்தப் ***படுபிணி யொழியார்***
***னுண***
அணியுழ வாரந் தாங்கி யையனைப் பணிந்து பந்தப்
பிணியொழித் துயர்ந்த ஞானப் பெருந்தகைப் பிரானை
யுள்வாம்.

## ஆற்றூர்ப் புராணம்

61 ஒருமகள் மயக்க நீங்கா துழன்று சாம் பரிற்புரண்ட
*திருமகள் மணாளன் நாணத்* திருப்புக லூர்மின்
னார்முன்
பெருமகள் மதலைத்தாம பிறைச்சடாமுடியவெற்பின்
வருமகள் முதல்வ வென்று வாழ்த்தி வாழ்ந்தவர்தாள்
போற்றி.

## தனியூர்ப்புராணம்

62 முகத்தின்மண் முழுதிடந்து முன்னவன் பாதங்
காணான்
*அகத்தின் நாணடைய* வங்கையலர் செறியுழ
வாரத்தின்
இகத்தின்மண் மேலிடந்தவ் விறையடி தலைமேற்
சூட்டச்
சுகத்தினல் லூரிற் பெற்ற தூயரைத் துதித்து வாழ்
வாம்.

## திருப்பெருந்துறைப்புராணம்

63 பாலிடை நஞ்சங் கண்டு பதை பதைத்தோடி
யோர்பால்
நூலிடை யவருண் பாக்கு நுவன்ற*மா லயனுண்*
*ணைப்*
பாலிடை நஞ்சங் கண்டு பதைப்பின்றித் தாமுண்
டோர்பால்
நூலிடை யவரே யென்னப் பொலியு நோன்மையர்
தாள்போற்றி.

### காசிரகசியம்

64 அருப்பிள முலையாள் பாகத் தண்ணலா ரினிதுமேய
திருப்புக லூருக் கப்பேர் யோகமே யென்றுசெப்பப்
பொருப்புமுள் ளுருகப் பாடிப் புகுந்துபே ரின்பந்
துய்த்த
விருப்புறு புகழ்சா ஹுவின் வேந்தர்தாள் வணக்கஞ்
செய்வாம்.

### மாயூரப்புராணம்

65 பெறுமணி நிறத்த மைத்தும் பிறங்குபொன்
னுடம்பிற் போர்த்து
முறுபெருங் காவல் பூண்டோர்ந் துறங்குமா யவன்
போலாது
பெறுமணி பொன்னெ லாங்கைப் பேருழ வாரத்
தாற்சோ
வுறுபுறம் விட்டானந்த வுறக்கஞ்செய் பவர்தா
ளுள்வாம்.

### உறையூர்ப்புராணம்

66 கந்தைமிகை யாங்கருத்துங் கையுழவா
ரப்படையுங் கவின்வெண் ணீறுஞ்
சிந்தையிடை யருவன்புஞ் சிவஞானம்
பழுத்தொழுகு செய்ய வாயும்
தந்தையொடு தாயிலான் திருவடிதை
வருமனமுந் தாரைக் கண்ணும்
நிந்தையறு முழுத்துறவு உடையபிரான்
அடிபணிந்து நீடு வாழ்வாம்.

## திருவம்பர்ப்புராணம்

67 ஆலம்பெற் றிருண்ட கண்டத் தண்ணல்பால்
நேமிகொள்ளக்
காலம்பெற் றலரோன் றற்காக் கண்ணிடு
மால்போலாது
சிலம்பெற் றருமை யாமோர் செந்தமிழ்ப் பதிகம்
பாடிச்
சூலம்பெற் றுயர்ந்த வையர் துணையடி முடிமேல்
வைப்பாம்.

## திருவாளொளிபுற்றூர்ப்புராணம்

68 ஒரோவொரு மாதர் மாமை நோக்கியுள்ளழிந்து
மாழ்குஞ்
சரோருகநெடு மாலாதி வானவர் சமழ்ப்புக்கொள்ள
வரோதய மடவார் மாமை சிறிதுமுண் மதியாராகிப்
பரோபகா ரத்தொண் டாற்றி யிருந்தவர் பாதம்
போற்றி.

## கோயிலூர்ப் புராணம்

69 உறவினுக் கிகற்கு நஞ்ச வுணவினுக் கமுதி னுக்குப்
பிறவினுக் கொருதன் மைத்தாய் நின்றருள்
வெற்றிமேவி
மறவினுக் குணர்வினுக்கு மேற்படு நிலைமை வாய்ந்த
துறவினுக் கரசுநாவுக் கரசினைத் தொழுதல்செய்வாம்

## திருக்குறுக்கைப்புராணம்

70 இருளென்று சொலத்திரிவார் மனம்வேவ
நீற்றறையு ளிருந்து முற்றேம்
வெருளென்று துயர்க்கடலு ளவரமுந்தக்
கருங்கடற்கன் மிசைமிதந்து

மருளென்று மாருத வெண்ணீறுங்
கண்மணியு மைந்தெ ழுத்தும்
பொருளென்று தெரிவித்த புண்ணியவா
கீசர்பதம் போற்றி வாழ்வாம்.

### கண்டதேவிபுராணம்

71 நீற்று மெய்ச் சிவனே யென்றும் அவனினும்
நிறைந்தாரென்றும்
சாற்றுதற் கியையத் தந்தை தன்பரி யாயப்பேருள்
ஈற்றுமெய் கெடுத்தோன்றிற் பன்னிரண்டன்
மெய்கொடுத்துக் கூறத்
தோற்றுமெய்ப் புகழ்சால் நாவிற் கரசினைத் தொழுது
வாழ்வாம்.

### வீரவனப்புராணம்

72 சொல்லரும் படைக ளெல்லாந் தொழிற்படா
வண்ணம் வைத்தே
வெல்லரும் பகையு றுப்பால் வெல்லும்வித் தகனே
போன்று
புல்லருஞ்சூலம் பெற்றும் பொருதொழின் மாற்றித்
தெவ்வை
அல்லரும் வாக்கால் வென்ற அண்ணலை
எண்ணுவாமே.

### மண்ணிப்படிக்கரைப்புராணம்

73
சூலத்தைத் தோளி லேற்றுஞ் சுடுதழ னஞ்சமுண்டு
நீலத்தைக் குமைக்கு மேனி நெடுங்கரி வணங்கக் கண்டுஞ்

சீலத்தை யுடையா ரேத்துஞ்சிவபெருமானேயென்ன
கோலத்தைக் கொண்ட செம்மல் குளிர்மலர்ப் பாதம்
போற்றி.

## *திருவாரூர்த் தியாகராச லீலை*

74 உயிர்பலவுந் தத்தமனம் வைத்துநனி சுமந்துள்ள
வுள்ளபெம்மான்
தயிர் விரவு வெண்சோறு சுமந்துள்ளி யெதிர்வரவச்
சாமிதாட்குச்
செயிரறுமன் புறச்சுமந்த செழுமணியை யுழவாரஞ்
செறிகைத்தேவை
அயிரினுமின் சுவையுடையொண் சிவஞானத் தமிழ்ப்
பொழிநா வரசையுள்வாம்.

75 சுவைபடு கவலை மூலஞ் சுரைபடும் இரும்பாற்கல்லு
நவையறு குறவர் தோன்று நகுமணி யுந்து வாரச்
செவையுறு கருவியானந் *திருப்புகலூரில்*
*ஒண்காசு*
*அவையுழ வாரத்துந்தும் ஆண்டகை யரசு*
*போன்றூர்.*

## *திருத்துருத்திப்புராணம்*

76 முழுதுல கீன்ற தாயே முலைசுரந் தூட்ட வுண்டு
தழுவருட்சிவபிரானைத்தந்தையாக்கொண்டவள்ளல்
தொழுதுகை யப்பரேயென் றுவகையிற் றொடரப்
பெற்ற
வழுவறு வர்க்கின் வேந்தர் மலரடி வழுத்தி
வாழ்வாம்.

—

## பிற ஆசிரியர்கள் செய்தருளியவை

### உபதேசகாண்டம்

77 முப்ப ணைத்திற மூவரிற் காட்டியோர் முதலாய்க்
கப்ப னைத்துமா ருயிரெனக் கவைத்தரு வானேற்
கொப்ப னைத்திரு நாவினுக் கரசெனு மொருபேர்
அப்ப னைத்தொழு தகற்றுது மும்மலத் தவலம்.

### அருணகிரிபுராணம்

78 பன்னெடுநா ளமண்ணைவகிப் பருவமுறப் பசுபாசஞ்
சின்மயனின் னருள்பெற்றுச் சிறுபிணியுந் தீர்ந்தானை
இன்னிசையா லியலியம்பி வாகீச னெனுநாமந்
தன்னையுநின் மலனருளாற் றரித்தானைத்
தாள்பணிவாம்.

### திருவாரூர்ப்புராணம்

79 ஆலநிழ லமர்ந்தபிரா னருளி னலே
அன்றெருகற் புணையாக ஆழி நீந்தி
ஞாலமுழு தய்ந்தருள நவையி லாத
நறுந்தமிழின் பலமினிது நாளு நல்கிச்
சாலமிகு பாவமுது வேனில் வெம்மைத்
தழலாற வாகமநூற் றருமஞ் சான்ற
சீலநிறை சைவநெறி நிழல்ப ரப்புந்
திருநாவுக் கரசினடி சிந்தை செய்வாம்.

## இலிங்கபுராணம்

80 கூற்றினுங் கொடிய பறித்தலைச் சமணர்
கொட்டுநீற் றிடையினு ளிருத்தி
நீற்றவந் நீறு விரைகமழ் புழுகு
நெய்சொரிந் தாலெனக்குளிர
மாற்றறு பசும்பொன் வடவரை குழைத்து
மாற்றலர் புரமெரி மடுத்தோன்
போற்றருங் கமலச் சேவடித் துணைகள்
போற்றிய தலைவனைத் தொழுவாம்.

## பிரமோத்தரகாண்டம்

81 ஆரணநன் னிலையறியாச் சாக்கியர்க ளருங்கற்றூண்
பாரறிய மருங்கசைத்துப் படுநீரிற் புகவுந்த
வாரணநல் லுரியானை யேத்திமுந்நீர் வடதளிரில்
நாரணன் போலினிதமர்ந்த நாவலன்பொற்
றுள்தொழுவாம்.

## கூர்மபுராணம்

82 புல்லா ராய சமண் புலையர்
பொருந்த வீக்கிக் கடற் புகுத்துங்
கல்லே புணையாக் கரை யேறிக்
கவர்வாய்ப் புள்ளின் வாய் கிழித்த
கொல்லே றுயர்க்குங் காமாரி
குளிர் பொற் கமலத் தாள்பழிச்சுஞ்
சொல்லே புணையாப் பவக்கட லுங்
கடந்தோன் பாதந் துதித் திடுவாம்.

### காசிகாண்டம்

83 கருவாழிக் கரைகாணுச் சாக்கியர்கள்
கற்றூணிற் சிக்க யாத்துப்
பெருவாழி யிடைவீழ்ப்ப வதுபுணையாக்
கரையேறிப் பெட்பி னுள்ள
முருகாமெய்ம் மயிர்பொடிப்ப வோங்கெயின்மூன் று
எரித்தோனை உவந்து பாடுந்
திருநாவுக் கரசனிரு சேவடிப் பூங்
கமலமலர் சென்னி சேர்ப்பாம்.

### வாயு சங்கிதை

84 வலஞ்சுழி யுந்தி வயிற்றெழு நோயு
மயக்கிடு பிறவிவெங் நோயுங்
கலங்கியே அகலக் கரைபொரு திரங்கு
கருங்கட லுண்முளைத் தெழுந்த
விலங்கொளிப் பவள வரைநிகர் முதலை
இன்னிசைத் தமிழினுற் பாடிப்
புலன்களைந் தினையும் வென்றுமெய்ஞ் ஞானம்
பூத்தவன் பொன்னடி தொழுவாம்,

### மச்ச புராணம்

85 பெருநாவ லிருநிழற்கீழ்க் குளிர் புனற்குண்
முளைத் தெழுந்த பெம்மான் செம்மை
தருநாவுக் கிசைத்தமிழா லலைகடலின்
இடைப்பிணித்த தனிகற் றூணன் று
ஒருநாவா யெனமிதப்ப வீற்றிருந் தங்கு
ஐந்தெழுத்தின் உண்மை ஓதும்

திருநாவுக் கரசரிரு பிரசமலர்ச்
சேவடியைச் சிந்தை செய்வாம்.

### சங்கரநாராயணர் கோயிற் புராணம்

86 கரைபொரு திரங்கு விரிதிரைக் கடலிற்
கட்டின ரிட்டகற் றிரளே
பரிவுறு புணையா வதனில்வீற் றிருந்து
பழுத்தபாண் மிழற்றுவண் டினமார்
முருகவி ழிதழித் தொடைசடை முடித்த
முதல்வனை வழுத்திய கோமான்
மருவுயிர்த் தினிய முருகுகொப் பளிக்கு
மலரடி வணங்குதல் செய்வாம்.

### திருக்கூவப் புராணம்

87 மருக்கு லாவு மறைவனத் தொன்றிய
திருக்க பாடந் திறந்தசொல் வேந்தனை
அருட்கு லாவு மறிவினை மூடிய
இருட்க பாடந் திறக்கவு மேத்துவாம்,

### திருவையாற்றுப் புராணம்

88 செஞ்சடையார் புகழ் விதைத்துத் திருஞானநீர்தேக்கி
அஞ்சுகளை யறுத்துடனே அமணர்களை வேரறுத்துப்
பஞ்சநதிக் கைலையினிற் பயன்விளைந்து புகலூரில்
தஞ்சமுதற் கண்டபிரான் சரணகம லம்போற்றி.

### நல்லூர்ப் புராணம்

89 பூவினுற்றிடு புங்கவன் மான்முதல்
தேவர் கட்கர சாகிய தேவனூர்

ஏவல் பெற்றகத் தென்றும் புயத்திடு
நாவினுக் கரசின்பத நண்ணுவாம்.

## சீகாளத்திபுராணம்

90 வேற்று ருக்கொள் விதியறி யாவரன்
நீற்று வெண்பிறைக் கேழ்கிளர் செஞ்சடை
யாற்று ணுச்சுமை யேற்று மருந்தமிழ்
மாற்ற ருந்தவத் தோனே வழுத்துவாம்.

## திருக்கழுகுன்றப் புராணம்

91 குறித்தகுலத் திலகவல்லிக் கிளேவளேப்ப
வளேப்புண்டு கொடிய நாகம்
பறித்தகுருந் தினேமீட்டு நீற்றறை யின்
வன்னிவென்று படருங் கோட்டு
வெறித்தமத மாக்களேயும் விலக்கிமுழங்
கியவத்தி மீதே குண்டர்
செறித்தகல்லான் மிதந்துவருந் திருநாவுக்
கரசுநிழற் சேர்ந்து வாழ்வாம்.

## செவ்வந்திப் புராணம்

92 புத்தியற் றிருக்கும் பொய்யர் புறச் சமயத்தை நீங்கிச்
சத்தியப் பொருளே யோர்ந்து தலேவனே யறிந்து சைவ
பத்தியிற் கனிந்தஞானப் பழத்தினே யொருகற்றாணல்
அத்தியைக் கடந்த நாவுக் கரசினே வணங்கு வோமே.

## திருவெண்காட்டுப் புராணம்

93 இற்றாணின் மரகதத்தி னெளிபகலும்
இருள்காட்ட எழுந்து காமன்

விற்றாணி மலரெடுத்து விளையாடுந்
திருவாமூர் விளங்க வந்தோன்
கற்றூணைப் பிடித்துவளை கடல் கடந்தோன்
இருபாத கமல மன்ன
பொற்றூணைப் பிடித்துநம திடராழி
கடந்துகதி புகுத லாமே.

## திருவாவடுதுறைப் புராணம்

94 கற்பெருந்தூண் புணையாகக் கடல் கடந்தை
யாற்றி லெழிற் கயிலைகண்டு
பற்பணியின் விடந்தீர்த்தப் பூதிமக
வுயிரளித்துப் பதிகச் சொல்லாற்
பொற்புறுவே தாரணியக் கதவு திறந்
தருட்புகலூர்ப் பொருளிற் சேர்ந்த
அற்புதநா வுக்கரசி னடியிணைப்பூ
முடியிலுற அமைத்தல் செய்வாம்.

## திருவாலங்காட்டுப் புராணம்

95 குரவர்தங் குறிப்புக் காகக்
கலன்கழி கொள்கை பூண்டு
பரனடி யடைந்த நங்கை
பணியணி யாகத் தாங்கி
விரவிய வமுதத் தீஞ்சொன்
மெல்லிசை வீறும் பாவால்
அரன்மகிழ் சிறந்த நாவுக்
கரசினை யகத்துள் வைப்பாம்.

## கருவூர்ப் புராணம்

96 சூழிமால் யானை தாழப் பிணித்தகற் றூணந் தாழா
தாழிவாய் மிதப்ப மேலா மைந்தெழுத் துணர்வி
ஞேங்கிக்
காழிவாழ் ஞானம் பூத்த கவுணியக்கொழுந்தை நட்ட
வாழிவா கீசர் வாச மலர்ப்பதம் வணங்கல் செய்வாம்.

## திருவோத்தூர்ப் புராணம்

97 உருகலுறு முழுவலெனும்
உவாக்கடலுள் உளந்ததும்பிப்
பெருகுமருட் கடலழுந்திப்
பிறவியெனும் பெருங்கடலுந்
திருகுமனத் தமணரிடுந்
திரைக்கடலும் விடநீந்தி
வருமொருநா வுக்கரசின்
மலர்ப்பதங்க ளிறைஞ்சுவாம்.

## திருச்சுழியற் புராணம்

98 புல்லோடுந் தழையோடும் பூசிப்பார் தமக்கெதிரே
வல்லோடுந் தனத்துமலை மகளோடு வருவானைச்
சொல்லோடும் பொருளோடுந்துயரோடும் படிபாடிக்
கல்லோடு மிதந்தானைக் கருத்தோடும் பணிகுவமால்.

## திருநெல்வேலிப் புராணம்

99 குண்டர்பா யுடையர்வெங் கொடிய பாதகர்
தெண்டிரை யிடத்திடு சிலைமி தப்பவெம்

அண்டர்நா யகனெழுத் தஞ்சு மோதியே
தண்டமிழ் பாடினூர் சரணம் போற்றுவாம்.

## *திருவதிகைப் புராணம்*

100 வாரணங் சொல்லவந்த காலையில் வருந்திவீழ
வாரணந் தன்னைச் செற்றுமகிழ்ந்தவர் இறும்பூதெய்த
வாரணங் கொல்லவந்த காலையில் வருந்திவந்த
வாரணம் வணங்கியேகும் வாகீசற் பணிவாமன்றே.

## *பிரபுலிங்க லீலை*

101 பெண்ணிற் கரசு தானுக
வென்பு ***பெருநீற்றறை பிரச***
***வண்ணக் கமல மலர்ப் பொய்கை***
***யாகச்*** செங்கல் மாழையாய்
நண்ணச் சிறிய நரிகண்முடங்
குளைய பரியாய் நகர்புகுதப்
பண்ணற் குரிய வமுதுறழ்முத்
தமிழ்நால் வரையும் பணிகுவாம்.

## *திருப்பாதிரிப்புலியூர்ப் புராணம்*

102 திரையேற விட்ட கற்றூண் புணர்ப் பறச்சொற்
றுணைப்பதிகந் திருந்தப் பாடி
விரையேற விட்ட நறை யிதழிமுடி
யரனருளால் வென்றிமேவ
இரையேற விட்டசம ணற வுயிர்கள்
பவக்கடலினின் றென்று மேறக்
கரையேற விட்டபிரான் புகழ் விளைத்த
நாவரசைக் கருதி வாழ்வாம்.

## திருச்செந்தூர்ப் புராணம்

103 கலக மிடும் பொய்ச் சமணர் குழாங்
கட்டிக் கடலி னிடைப்புகுத்த
உலகம் பரவ விடுத்த கல்லே
உயரும் புணையாக் கரையேறி
இலவ விதழோர் பங்க மைத்த
எம்மான் கமலத்தாள் பழிச்சுஞ்
சொலவின் புணையாப் பவக்கடலுங்
கடந்தான் சரணத் துணை துதிப்பாம்.

## உத்தரகோசமங்கைப் புராணம்

104 தொலையாத பவக்கடல் யாங் கடத்துமெனப்
பிறர்க் குணரச் சொல்வார் போல
நிலையாத புறச்சமயக் குறும் பரிறு
குறப் பிணித்த நெடுங்கல் லோடு
மலையாடு பெரும் பரவை யழுந்தாதக்
கன்மிதப்பா யாழி நீந்தித்
தலையாய பொருளுணர்ந்த வாகீசர்
மலர்ச் சரணஞ் சரணமாதோ.

## கடம்பர் கோயிற் புராணம்

105 ஞானந்தங் கருணி ருண் டமண்பாழி
யிடித்துவினை கறுத்தெஞ் ஞான்று
மீனந்தங் குலகாசைக் கடுங் கோடை
யிரிந்தோட வெம்மான் சைவத்
தானந்தங் கருட் செல்வந் தழைத்தோங்கத்
தாண்ட கச்சீர்ப் பதிக மென்னும்
ஆனந்தம் பொழிமுகிலை அகமலரத்
தொழுதுவினை அகன்று வாழ்வாம்.

## சிவராத்திரி புராணம்

106 காவரசு மலர்யன்மால் கடவுளர்க்காச்
சென்றமர்செய் காம னைம்
பூவரசு படவிழித்துப் புனவேங்கை
அத்தி யதழ் புனைந்து போர்த்த
தேவரசு மனமகிழத் திருப்பதிகம்
இசைத்தமிழிற் சிறக்கப்பாடு
நாவரசு பதம்பரசு நமக்குயர்பொன்
னாட்டரசு நல்கு மன்றே.

## புலியூர்ப் புராணம்

107 வில்லரைய னஞ்சமொடு நீற்றறை வெவ்
வேழமுன மேவப் பண்ணிக்
கல்லரையி னுறப்பிணித்துக் கடல் வீழ்த்த
அதுபுணையாக் கருணை செய்ய
வல்லரையாம் பாடுவமென் றஞ்செழுத்தின்
பதிகத்தை வாழ்த்திச் சேர்ந்த
சொல்லரைய னல்லபத நளினங்கள்
எந்நாளுந் துதிப்பாஞ் சூழ்ந்தே.

## சீர்காழிப் புராணம்

108 விடற்கரிய கொடும்பாசத் தொடரறுத்தைம்
புலனைய வேழஞ் சீறி
அடற்கரியின் மும்மதமும் அமணருடைத்
துன்மதமும் அழிய நூறித்
தடக்கடலைக் கன்மிதவை யாலுழக்கிச்
சிவஞான தானம் வீசுங்

கடக் களிறென் றுலகேத்த வருநாவுக்
கரசர்பதம் கருதி வாழ்வாம்..

### சாந்தகணேச புராணம்

109 அற்படு மிடற்றினன் அருளி னுலொரு
கற்புணை யாகமாக் கடல்க டந்தவன்
நற்பெயர் தன்னையே நவிறி யுள்ளநீ
பற்பல பிறவியாம் பரவை நீந்தவே.

### திருவாப்பனூர்ப் புராணம்

110 மண்ணாசை பெண்ணாசை மூன்று நீத்து
மனத்தாசை யறவெறிந்தா னந்த நீர்பாய்
கண்ணாசை சிவபெருமான் காட்சிக் காக்கிக்
கருத்தாசை யவனருட்கே கைம்மாறுக்கி
யுண்ணாசை மருந்தனையார் புகலூர் மன்னும்
உழவாரப் படையாளி உருகிப் பாடும்
பண்ணாசைத் திருநாவுக் கரையன் பாதம்
பத்திபழுத் தொழுக நெஞ்சிற் பதித்துவாழ்வாம்.

### திருப்பூவணப் புராணம்

111 அருள்பெருகுந் திலகவதி யாரருளால்
அமண் சமய மகற்றி அன்பாற்
கருதரிய கற்புணையாற் கடனீந்திக்
கருவேலை கடப்பான் சீர்த்தி
மருவுதிரு வாமூரில் வைதிகசை
வந்தழைப்ப வந்து தோன்றித்
திருவதிகைப் பதிவருசெந் தமிழ்நாவுக்
கரையர்பதஞ் சிந்தை செய்வாம்,

## மயூரகிரிப் புராணம்

112 மணிவயிற்றிற் சூலைதவிர்த் தங்கையினிற்
புனைசூலை வன்றேட் டிட்டி
அணி திகழ்தன் றிருப்பாதஞ் சிரஞ்சூட்டிச்
சிவனுளு மப்ப னெம்மான்
பணிவிடையி லுயர்வுற்றேன் வேளாளர்
குலம் விளக்கும் பரிதி போல்வான்
தணிவில் புகழ்த் திருநாவுக் கரையனிரு
சரணமலர் தலைமேற் கொள்வாம்.

## ஆதிபுரி புராணம்

113 தெருண்மிகும்பே ரன்பினுக்கோர் கொள்கலமா
யளப்பரிய தெய்வக் கற்பின்
வருதிலக வதிவருத்தங் கண் டிறைவன்
விடுஞ்சூலை வழிதான் காட்டப்
பெருகொளி வெண் ணீறணிந்து சாக்கியர்தம்
மதம் பொய்யாம் பெருமை காட்டிக்
கருநிறத் தெண் டிரைக்கடலிற் கன்மிதப்ப
வந்தவர்தாள் கருத்துள் வைப்பாம்.

## திருமுருகன்பூண்டிப் புராணம்

114 பற்ற லார்புரம் பொடிபட
நகைத்தவன் பதமலாற் பிறவிக்கு
மற்று வேறிலை மருந்தெனத்
திருந்திய மாசிலன் புடையர்னைத்
துற்ற சாக்கியர் பிணித்திடு
நெடியகற் றூணையஞ் செழுத்தோதி

எற்று வாரியின் மிதந்திடப்
பணித்தவா கீசனைத் துதிசெய்வாம்.

### பவானிகூடற் புராணம்

115 அடலயிற் சூலப் பொருபடைத் திருக்கை
அமலன தருளினற் கொடிய
விடலையிற் றீய வஞ்சக வமணர்
வீக்குகற் றாணெடு மிட்ட
கடலையும் பிறவிக் கடலையும் பஞ்சாக்
கர வருட் பாதையிற் கடந்து
நடலைவாழ் வொழிந்து முத்திவாழ் வடைந்த
நாவினுக் கரையர் தாள் தொழுவாம்.

### மருதூர்ப் புராணம்

116 உடல்குழைய மொழிகுழற விழிநீர் மல்க
வுளத்திலன்பு கனிந்தொழுக வுரக னுச்சிக்
கடல்புடைசூழ் புடவியிடைத் தலங்க டோறுங்
கவியலங்க லணிந்தரனைக் கண்டு போற்றி
நடைநடந்து கால்தளர்ந்திட் டிருகை யூன்றி
நடுக்கமுறத் தவழ்ந்து பொய்கை நன்னீர்மூழ்கி
வடகயிலைப் பொருப்பையா றதனிற் கண்ட
வாகீச ரிணைமலர்த்தாள் வணக்கஞ் செய்வாம்.

### ஆதித்தபுரி புராணம்

117 மல்லாருஞ் சூலையெனும் இருவினையொப்
பாற்பவுத்த மாயா பேதம்
இல்லாமற் றிலகவதி யாரெனுஞா
னத்தரனு ரிணைத்தாள் சேர்ந்தே

கல்லாலோ ருததிதனைக் கடந்துபா
திரிப்புலியூர்க் கண்டு நீதிற்
செல்லாத சொல்லரசி னிலைபரவி
மகிழ்பூத்துச் செழித்து வாழ்வாம்.

## திருக்குற்ருலப் புராணம்

118 திருநீற்றை மெய்யமுத்தி யஞ்செழுத்தை
நெஞ்சழுத்திச் சிலைக்கை மாரன்
உருநீற்றும் பெருமானை யுறவழுத்திச்
சமணரெனு மொன்னர் மூட்டும்
பொருநீற்றுக் குடவறையுங் கடகரியும்
விடவரவும் புறங்கண் டாழிக்
கருநீத்தங் கடப்பவொரு கற்றூணி
யுகைத்தானைக் கருத்துள் வைப்பாம்.

## மயூரர்சல புராணம்

119 இப்பிறவிக் கடல் கடப்பா னெண்ணு மனத்
தினர்யாரு மனிதாய் மாதர்
துப்புறுமா மயலுவரி காராழி
நீற்றறையுந் துணுக்கென் றேறி
மைப்படுவி டோதனமுங் கடந்துமத
மலைகடந்து வந்த வெங்கள்
அப்பரிரு பதங்கருதிற் செப்புவதென்
னேயவர்கட் கண்ணுந் தானே.

## சூதசங்கிதை

120 பரசிவமென் றடியவரைப் பகருமறை
கனிதூங்கப் பலரும் போற்றப்

பிரசநறுங் கடுக்கைமுடி யப்பரன்போல்
விடநுகர்ந்து பெயராச் சீற்றப்
புரசைநெடுங் களிற்றினைவென் றெழுவிடைவென்
முழுவிடைசூல் பொலியக் கொண்ட
அரசுதிருப் பாதமலர் பரசுமெய்ப்
போதமுறீஇ யமைந்து வாழ்வாம்.

## புள்ளிருக்குவேளூர்ப்புராணம்

121 அருகரமைத் திடுநீற்றி னறைமுதலாந்
தீங்கடியார்க் கணுகா தென்னும்
பெருமையெடுத் துலகறியக் காட்டிமக
ரஞ்சுழலும் பெருநீர் மல்குங்
கருநிறத்தெண் டிரைக்கடலிற் கன்மிதப்ப
வருநாவுக் கரசின் செம்பொற்
றிருவடித்தா மரைமலரைப் பவக்கடலின்
கரையேறச் சிந்தை செய்வாம்.

## பழநிப்புராணம்

122 மலராசி நெறியரிடுங் கற்புணைவா
ரிதிமிதப்ப மறைவல் லோர்பற்
பலராசி பகர்திருப்பா திரிப்புலியூர்க்
கரைசார்ந்து பவநோய் தீர்வான்
புலராசி நெறியொருவிச் சிவசமய
நெறியினிடைப் போந்து ஞானச்
சலராசி படிந்ததமிழ் வாகீசர்
சரணமலர் தலைமேற் கொள்வாம்.

## சிதம்பரபுராணம்

123 அருமறையி னெறிவிளக்குந் திருஞான
சம்பந்தர் ஆழிமீது
மருவுமொரு கன்மிதப்பின் வந்தநா
வுக்கரையர் மங்கை பாகத்
தொருவனம தடிமையிவ னெனவாண்ட
வாரூர ருலவா தோங்குந்
திருவருள்கூர் திருவாத வூரரிவர்
பதமலர்கள் சிரத்தின் வைப்பாம்.

## கடம்பவன புராணம்

124 அடலமணைக் கழுவேற்றுந் திருஞான
சம்பந்த ரடிகள் போற்றி
கடலிடைக்கற் றூண்மிதப்ப வோது தமிழ்க்
கடலினடிக் கமலம் போற்றி
மடலவிழ்பூங் குழற்பரவை வாசலினம்
மிறையிருதாள் வருந்த மீண்டுந்
தொடர்வருந்தா தெனவிடுத்த சுந்தரன்பொற்
றாமரையாந் துணைத்தாள் போற்றி.

## சரபபுராணம்

125 அழுதுலகை வாழ்வித்த திருஞான
சம்பந்த ரமணர் கொண்ட
பழுதடைந்த நெறிகடந்து பார்புரந்த
வாகீசர் பகிரண் டங்கள்
முழுதுடையான் றொடர்ந்தாண்ட முதன்மைபெறு
மாரூரர் முதல்வன் றுளெப்

பொழுதுநினேந் துருகு திரு
வாதவூ ரண்ணல்பதம் போற்றல்செய்வாம்.

### *கணேசபுராணம்*

126 அதிமதுரக் கவிமழைபெய் காழிமுகிற்
றுணேச் சரண மன்பினேத்தி
***நதிபதியிற் கன்மிதப்பில் வந்தவர்தம்***
***பதம்போற்றி*** நறுமென் கூந்தல்
மதிநுதனற் பரவைமனேக் கிறைவனேத்தூ
தாக்கினரை வணங்கிக் கூடற்
பதியதிப னிடத்திலரன் பரிகொணரச்
செயுமவர்தாள் பணிந்து வாழ்வாம்.

### *சிதம்பரம் சபாநாதர் புராணம்*

127 பாயுடுத்துத் தலேமயிரைப் பறித்தெறிந்து
நின்றுண்ணு மமணர்பாழி
போயடுத் தங்கவர்புரிந்த வஞ்சமெலாஞ்
சிவானந்த நிறைந்துபொங்கி
வாயிடத்து வருஞானப் பதிகத்தா
லறுத்தருள்வா கீசர்சீர்த்தி
நோயெடுத்த கொடும்பிறவிப் பிணியொழிய
எந்நாளும் நுவல்வாமன்றே.

### *பரிதியப்பர் ஸ்தல புராணம்*

128 திலகவதி யார்வேண்டச் சிவனருளாற்
செந்தமிழைச் செழிக்கப்பாடிக்
கலகமிகுஞ் சமண்பகையுங் கற்புணேயாற்
கருங்கடலும் கடந்து தொண்டர்

நலமுறவே யின்பமழை பொழிமுகிலாய்த்
தோன்றியெந்த நாளுமோங்கி
யிலகியிடும் வாகீசர் பொற்கமலச்
சரணிணைகள் இறைஞ்சி வாழ்வாம்.

## திருக்களர் புராணம்

129 உலகெலா மெனப்பாடென் றடியர்தமக்
குரைபகர்ந்த வொருவன் றனே
யலகிலா முதுமறைக்கு மறிவரிய
பரஞ்சுடரென் றறிவால் நோக்கி
நிலைநிலாப் புன்சமயத் தமணொழுக்க
நெறிமுழுது நீக்கு ஞானத்
தலைமைசால் வாகீசர் தாள்மலரை
யெமது சிரந்தரித்தல் செய்வாம்.

## திருக்காருயிற் புராணம்

130 பூண்டிடு கண்டிநீறு புறத்துறுப்பாகத் தம்மை
ஆண்டவ னெழுத்தோ ரைந்தும் அகத்துறுப்பாகக்
கொண்டு
மூண்டெழுஞ்சமணராய முரட்டுவெம் பகைகடந்த
தாண்டக வேந்தர் பாதந் தலைமிசைக் கொண்டு
வாழ்வாம்.

## திருத்திலதைப்பதி புராணம்

131 நீண்டவன் பிரமன்காணு நின்மலன் சூலைநோயால்
ஆண்டநா வரையராழி யக்கரமைந்தால் நீந்திப்
பூண்டமெய் யன்பர்நாடிப் போற்று தேவாரந்தந்த
தாண்டகச் சதுரர்தாள்கள் தலைமிசை தரித்தல்
செய்வாம்.

## திருக்கோவலூர் புராணம்

132 வினைக்கடலும் பவக்கடலும்
வெறுஞ்சமயத் தனிக்கடலும்
அனைத்துலகும் புகுஞ்சரியை
கிரியைபிற வருங்கடலுந்
தனித்தகல்வான் றிரைக்கடற்கற்
புணைதரித்துக் கரையேறும்
கனித்தவருட் கடனுவுக்
கரசடியே கருதுவாம்.

## திருப்பனந்தாள் தலபுராணம்

133 கூர்த்தவாய் மூர்மலைகின்
றெழுந்தமண்பா ழியிலன்னர்
வீழ்த்தவீழ்ந் தாற்றியங்கு
மிகுபொருளை யரித்து வந்தே
ஆர்த்தவர சாலுறுத்தே
அருட்கடல்சேர்ந் தறம்பூத்த
தீர்த்தநதி யெனுநாவுக்
கரையர்பதஞ் சிரத்தணிவாம்,

## திருக்கூடலையாற்றூர் புராணம்

134 அஞ்சிடத் தெவ்வ ரெல்லா
மைந்தெழுத் தடைவிலுன்னி
துஞ்சிட வருத்து நஞ்சைத்
தூயநல் லமுதாக் கொண்டும்
வெஞ்சினக் களிற்றை வென்றும்
வேலைநீர் படிந்தெழுந்து

முஞ்சவ ரடிகளன்றி யுறுதுணை
யில்லை வேறே.

## திருநாரையூர் புராணம்

135 கருஞால முண்டவன் பிரமாதி தேவருங்
காணாமை வெந்தழற் றூணாகி நின்றவெம்
பெருமா னடித் தொண்டி னுயர் வீறு தேறவும்
பேரா வியற்கைமெய் வீடேய வும்புவி
வருஞான சம்பந்தர் வாகீசர் சுந்தரர்
மணிவாச கங்கோவை தருமன்ப ரென்னுமித்
திருமா ணெழிற்சமய குரவோர்த மின்னருள்
தேனூறு செங்கமல பாதங்கள் போற்றுவாம்.

## திருக்காளத்தி புராணம்

136 தெளிந்த புனற் பொன்முகரிக்
கரை யமர்ந்தார் திருவருளால்
உளங் குளிர்வா விக்கரையிலுமை
முலைப்பா லுண்டார்க்குங்
களங்கமின்றிக் கடற்கரைக்கே
கன்மிதப்பிற் சேர்ந்தார்க்குங்
குளங்கரையின் முதலைவாய்
மதலைதந்தார்க் குங்குடிநாம்,

## திருவாமாத்தூர் தலபுராணம்

137 நரிக்குதிரை கண்டுவந்த முனியைப் போற்றி
நாவாய்போற் கன்மிதப்ப நவின்றுற் போற்றி
எரிக்கும் என்போர் பெண்ணாகப் படித்தாற்போற்றி
யிடங்கர்வாய்மகப்பெறுமாறிசைத்தாற்போற்றித்

தரிக்கும் வெண்ணீ றக்கமணி வடமுன்னுன
சாதனமுற் றோன்ரையெல்லாந் தாழ்ந்து போற்றிச்
சிரிக்கு முனிவாற் புரமூன்றெரித்த நாதன்
திருவாமாத்தூர் மகிமை செப்பு வேனே.

*வில்லைப் புராணம்*

138 துஞ்சு மாறடு மென்று துணிந்தமண்
விஞ்சு மூகர் விடுங்களி யானையை
எஞ்சு மென்றுளத் துள்ளியெங் கோனெழுத்
தஞ்சின் வென்றவோ ரன்பனே யேத்துவாம்.

*வானரமதுரைத் தலபுராணம்*

139 சமணர்களைக் கழுவேற்றும் பரசமய
கோளரிதன் தாள்கள் போற்றி
அமலனதஞ் செழுத்தோதிக் கற்புணையாக்
கடல்கடந்த அப்பர் போற்றிக்
குமரியளி பலகோடி கூட்டுண்ண
நறவுயிர்க்குங் கொன்றைப் பைந்தார்
உமையவள்நா யகன்தடுத்தாட் கொளவருஞ்சுந்
தரன்பதமும் உளத்துள் வைப்பாம்.

*திருப்பத்தூர் புராணம்*

140 பார்த்தளவே மனஞ்சோர்ந்து பதைத்துநளன்
வருணன் முதற் பற்பலோரைக்
கூர்த்ததுணை கொடுகுரம்பு குயிற்றியலை
கடந்திடுமக் குரிசில் நாண
வார்த்தெறி நீரமிழ்சிலைதன் னருள்வாக்கி
னுணையினுல் அம்பியாக

நீத்தமுந்நீர் நீத்தெமையும் பவக்கடனீத்
திட்டவர் தாள்நினைந்து வாழ்வாம்.

141 திருந்துவயல் புடைதழுவு திருப்புத்தூரென்றுந்
தேராரு நெடுவீதி திருப்புத்தூரென்றும்
புரிந்திடுபைம் பொன்காட்டக் கடிக்கொன்றை
-மருங்கே
புனக்காந்தள் கைகாட்டக் கண்டு
வண்டு கொடைமை
தெரிந்திசைத் தென்காட்டு திருப்புத்தூரென்றுஞ்
செப்பிவைமுற் பற்பலவாய்த் தீவினையேனுளத்
தும்
பரிந்துமலர்ப் பதமளிக்கும் வாகீசப் பெருமான்

பவளவாய்த் தமிழ்ச்சுருதி பரசியதிப்பதியே.

### *விருத்தாசல புராணம்*

142 மருங்குகடற் கன்மிதப்பில்
வந்தார்தம் பதம்போற்றி
பொருங்கரிமேற் கயிலையினிற்
போனார்தம் பதம்போற்றி
நெருங்குநரி பரியாக்கி
நிறுத்தினர்தம் பதம்போற்றி
இரும்பொருள்கேட் டரன்பக்கத்
திருந்தார்தம் பதம்போற்றி.

### *வசவபுராணம்*

143 போற்றி ஞானசம் பந்தன் பொலன்கழல்
*போற்றி நாவுக் கரையன் புகழ்ப்பதம்*
போற்றி வன்றொண்டன் பொன்னடி நாண்மலர்
போற்றி மாணிக்க வாசகன் பொற்சரண்.

## *இருடிவிந்தப் புராணம்*

144 ஞானசம் பந்தன் றன்னை
நாவினுக்கரசை யெண்டோள்
வானவன் தடுத்தாட் கொண்ட
வள்ளலை வாதவூரெங்
கோனையொன் பதிற்றே ழென்னுங்
கோதின்மா தவரைநீறு
மேனியி லணிவோர் தம்மை
விருப்பொடு கருத்துள் வைப்பாம்.

## *நம்பி திருவிளையாடல்*

145 படிபுகழ் சண்பை வேந்தர் மலரடி போற்றி பத்தி
வடிவுடையியல்தேர் *நாவுக்கரசடி* போற்றிமாலை
முடிகொள் சுந்தரர்தாள் போற்றிமூதுரை வாதவூரர்
அடியிணை போற்றி மற்றேங் கடியவ ரடிகள்
போற்றி.

## *சிவரகசியம்*

146 கதிரு லாவிய சபைதொறுங் காலொன்று தூக்கி
அதிர வீசிநின் றுடிய தாண்டவத் தவர்க்கே
மதுர மாத்திருத் தாண்டகச் செந்தமிழ் வகுத்த
சதுரனுவினுக் கரையன்றன் சரணமே சரணம்.

## *அவினசிப்புராணம்*

147 வலதவதி வாழ்வரிய மண்ணுலகின்
மாந்தரெலா மகவான் றேற்றம்

நலதவதி காரமென நாடுதலைக்
கடைப்படுமுன் ஞமலிக் காக்குங்
குலதவதி யானநெறி குன்றுத
கோமளப்பொற் கொம்பு போன்ற
திலதவதி யார் துணைவர் திருநாவுக்
கரையரடி சேர்ந்து வாழ்வாம்,

## திருமுல்லைவாயில்புராணம்

148 நாவரசி னருள்போற்றி நம்பிதிரு நாவலூர்த்
தேவரசினடிபோற்றி சிறந்ததிருப் பெருந்துறைக்குள்
மேவரசின் கழல்போற்றி மேதகுமந் திரமாலைப்
பாவரசின் சரண் போற்றி பரவுமன்பர் பதம்போற்றி.

## திருத்தேங்கூர்புராணம்

149 பேராழி வரையுடுத்த பாராழி
யளந்தமுகில் பெறவே வீறுங்
கூராழி யீந்தபிரா னெந்நாளு
மார்த்தியுடன் குலவு மூரின்
ஓராழி யிரதன்வரு காலையிற்கா
சேற்றபிரா னுளவா மையல்
வாராழி கடந்தமுதின் தமிழாழி
மொழிந்தவனை வணக்கம் செய்வாம்.

## சோழபுர புராணம்

150 சமணிழிவு மதுமுதலாஞ் சமயமெலாம்
கடந்தேறுந் தனிரா சாங்க
விமலநிறை சைவநிலை மேன்மையுநே
ரரசனுக்கும் விளக்கி மான்ற
வமணொழித்தவ் வரசுயவே யவண்புகுந்து
பற்பல்செய லருமை காட்டி
நமையருளு நாவரசர் நளினமலர்த்
திருவடிகள் நயந்து வாழ்வாம்.

## தாருகாபுரத்தலபுராணம்

151 காற்றெரியுந் தழைசெவியக்
களியானை வலியடக்கி
நாற்றிசையுந் தொழுதேத்த
நறுமலர்ப்பூம் பாயலின்மேல்
வீற்றிருக்குஞ் சீர்போன்று
வினைச்சமணர் தாமளித்த
நீற்றறையின் வீற்றிருந்தார்
நீண்மலர்ச்சே வடிதுதிப்பாம்.

## திருமழபாடிப் புராணம்

152 சிவனருள் பயின்ற பேர்க்குத்
தீயவு நல்ல வாதல்
புவனியோர் காணக்கற் றூண்
புணையெனத் தன்மை செய்யப்
பவநெடுங் கடலை நீந்திப்
பயிறல்போற் கடல் கடந்த
அவமிலாச் செய்ய நாவுக்
கரசர் தாளகத் துள் வைப்பாம்.

## திருவைகாவூர்ப் புராணம்

153 திருமருவு வணிகன் மகளங்க
மெழிலங் கனையாச் செய்பிரானை
*விரிகட லினிடைக் கற்றூண் மிதப்ப*
*விறையருள் சுரந்து விளங்கினானை*
யிருமைபெறு வெண்கரியின் மிசையிவர்ந்து
கைலைமலைக் கேகுவானைப்
பரிகொளவந் தரிய திருப்பணி புரிந்த
மந்திரியைப் பரவுவாமே,

—★—

# பிரபந்தங்கள்

—★—

## *திருத்தொண்டர் புராண சாரம்*

(கொற்றவன்குடி உமாபதி சிவம்)

154 போற்றுதிரு வாமூரில் வேளாண் டொன்மைப்
பொருவில்கொறுக் கையரதிபர் புகழனூர்பால்
மாற்றருமன் பினிற்றிலக வதியா ராது
வந்துதித்த பின்புமரு ணீக்கி யாருந்
தோற்றியமண் சமயமுறு துயர் நீங்கத்
துணைவரருள் தரவந்த சூலை நோயாற்
பாற்றருநீ ளிடரெய்திப் பாடலிபுத் திரத்திற்
பாழியொழித் தரனதிகைப் பதியில் வந்தார்.

155 வந்துதமக் கையரருளால் நீறு சாத்தி
வண்டமிழால் நோய்தீர்ந்து வாக்கின் மன்னாய்
வெந்தபொடி விடம்வேழம் வேலை நீந்தி
வியன்சூலங் கொடியிடபம் விளங்கச் சாத்தி
அந்தமிலப் பூதிமக னரவு மாற்றி
யருட்காசு பெற்றுமறை யடைப்பு நீக்கிப்
புந்திமகிழ்ந் தையாற்றிற் கயிலை கண்டு
பூம்புகலூ ரரன்பாதம் பொருந் தினரே.

## *நால்வர் நான்மணிமாலை*

(துறைமங்கலம் - சிவப்பிரகாச சுவாமிகள்)

156 வீட்டிற்கு வாயி லெனுந்தொடை
சாத்துசொல் வேந்தபொது

வாட்டிற்கு வல்ல னொருவற்கு
ஞான வமுதுதவி
நாட்டிற் கிலாத குடர்நோய்
நினக்குமுன் னல்கினுமென்
பாட்டிற்கு நீயு மவனுமொப்
பீரெப் படியினுமே.

157 எனக்கன்பு நின்பொருட் டெய்தாத
தென்கொள்வெள் ளேறுடையான்
தனக்கன்பு செய்திருத் தாண்டக
வேந்தவித் தாரணியில்
நினக்கன்பு செய்கின்ற அப்பூதி
யைச்சிவ நேசமுறும்
இனர்க்கன்பு செய்நம்பி யாரூர
னேத்து மியல்பறிந்தே.

158 கொள்ளைக் கதிர்முத்தின் பந்தருஞ்
சின்னமுங் கொள்ளுமொரு
பிள்ளைக் கதுதகு நாவர
சாயபெருந் தகையோய்
கள்ளைக் குவளை யுமிழ்வீ
ழியிற்படிக் காசொன்றுநீ
வள்ளைக் குழையுமை பங்காளர்
கையிலென் வாங்கினையே.

159 தாயிலி யாகுஞ் சிவபெரு
மான்றனைத் தானெனுமோர்
கோயிலி னுரறி வாகிய
நாமமுன் கொண்டிருந்த

வாயிலி னுணவ மாகுங்
கபாடமு மன்றிறந்து
நேர்யிலி யாகிய சொல்லிறை
காட்டுவ னேக்குதற்கே.

160 பாட்டான் மறைபுக மும்பிறை
சூடியைப் பாடிமகிழ்
ஊட்டாமகிழ்சொல் லிறைவனைப்
பாடி யுவப்புறுக்க
வேட்டான் மலிபெருங் கல்லவன்
போல மிதப்பனெனப்
பூட்டா மறிதிரை வார்கடற்
கேவிழப் போதுவனே.

161 அருகக் கடல்கடந் தேறிய
தோசிலை யம்பியெனப்
பெருகக் கடல்கடந் தேறிய
தோசொல் பெருமிடறு
கருகக் கடல்விட முண்டோ
னடியிற் கசிந்துமன
முருகக் கடலன்பு பெற்றசொல்
வேந்த வுனக்கரிதே.

162 துடைவாழை மேன்மட வாரல்குற்
பாம்பு தொடமயங்கி
நடைவாய் பிணமெனப் பட்டார்
பெறுகிலர் நச்சுகுலை
யுடைவாழை மேலுர கந்தீண்ட
மாய்ந்த வொருவனுயிர்

அடைவா னருள்புரி யுந்திரு
நாவுக் கரசினையே.

163 பெற்று நினைப்பெற் றவர்போற்
பெறலும் பிறப்பதுண்டேல்
நற்று ரணியில் நினைப்போற்
பிறப்பது நல்லகண்டாய்
செற்றார் புரமெரி செய்தவில்
வீரன் திருப்பெயரே
பற்று மறிவெண் டிரைக்கட
னீந்திய பாவலனே.

164 ஊர்ந்து வருமிள வேறுடை
யான்ற னுளத்தருளாற்
சார்ந்து சமண்வீட் டுறுமுனக்
கேவருஞ் சைவநலங்
கூர்ந்து மிளிர்தரு நாவர
சேநல் குரவுமுனஞ்
சேர்ந்து மருவினர்க் கேசிறந்
தோங்குறுஞ் செல்வமுமே.

165 உற்று னலன்றவந் தீயினின்
றுனல னூண்புனலா
வற்று னலனுகர் வுந்திரு
நாவுக் கரசெனுமோர்
சொற்று னெழுதியுங் கூறியு
மேயென்றுந் துன்பில்பதம்
பெற்று னெருநம்பி யப்பூதி
யென்னும் பெருந்தகையே.

## தாயுமான சுவாமிகள் திருப்பாடல்

166 தேவர்தொழும் வாதவூர்த் தேவேயென் பேன்
திருமூலத் தேவேயிச் சகத்தோர் முத்திக்
காவலுறச் சிவவென்வாக் குடனே வந்த
அரசே சும்மாவிருந்துன் னருளைச் சாரப்
பூவுலகில் வளரருணைக் கிரியே மற்றைப்
புண்ணியர்களோவென்பேன்புரையொன்றில்லா
ஓவியம்போ லசைவுறவுந் தானே நிற்பே
ஞேதரியா துயர்கெடவே யுரைக்கு முன்னே.

## எந்நாட் கண்ணி

167 இருநிலனய்த் தீயாகி யென்ற திருப்பாட்டின்
பெருநிலையைக் கண்டனைந்துபேச்சறுவ தெந்நாளோ

168 ஏரின் சிவபோக மிங்கிவற்கே யென்னவுழ
வாரங்கொள் செங்கையர்தாள் வாரம்வைப்ப தெந்
நாளோ.

——

## மாதவச் சிவஞானமாமுனிவர் அருளிய சோமேசர் முதுமொழி வெண்பா

169 பல்லவர்கோன் வந்து பணியக் கருணை செய்தார்
தொல்லைநெறி வாகீசர் சோமேசா—கொல்ல
இணரெரிதோய் வன்ன வின்னு செயினும்
புணரின் வெகுளாமை நன்று.

170 முன்னரமண்மதத்து மூண்டரசர் பின்சைவந்
துன்னியது மென்வியப்போ சோமேசா
—வுன்னுங்கால்
பேதைப் படுக்கு மிழவூ ழுறிவகற்றும்
ஆகலூ ழுற்றக் கடை

171 சம்பந்தர் நாவரசர் பாற்கண்டோம் சார்ந்துவப்ப
தும்பிரிவி னுள்ளுவதும் சோமேசா—நம்பி
உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்.

172 அப்பூதி யார்மறைத்தும் வாகீச ரக்கரவைத்
துப்பால் அறிந்தனரே சோமேசா—இப்புவியில்
ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்.

173 வாக்கரசர் பிள்ளா யெனவலித்து மாற்றலுற்றார்
தூக்குபிள்ளை யார்செலவைச் சோமேசா—நோக்கி
நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு.

174 வன்சமணர் தம்பிரிவால் வாகீசர்க் கின்பமின்றித்
துன்பமென்ப தில்லையே சோமேசா—நன்காம்
பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
பீழை தருவதொன் றில்.

175 நல்ல திலகவதி யார்மொழியை நம்பிவெங்நோய்
சொல்லரசர் தீர்ந்துய்ந்தார் சோமேசா—புல்லிய
நோய்நாடி நோய்முதனாடி யது தணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.

## முருகேசர்முதுநெறிவெண்பா

176 வாக்கரசர் சாவகரால் மாழ்கித் தமக்கையான்
மோக்கநிலை பெற்றார் முருகேசா—பார்க்குங்கால்
நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தின்
அல்லற் படுப்பதூஉ மில்.

---

## ஸ்ரீ வெள்ளியம்பலவாண முனிவர்
## அருளிச் செய்த
## முதுமொழிமேல்வைப்பு

---

177 அப்பர்முதற் சித்தாந் திகள்வீ டடைதலுமே
வைத்தபுவ னத்திருந்தார் மற்றையவர்—ஒக்கும்
பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்.

178 பிள்ளையினுங் கைத்தொண்டு பேணுதலாலப்பருக்கு
நல்ல படிக்காசு நல்குமால்—எல்லாம்
சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொரு
கோடாமை சான்றோர்க் கணி. [பாற்

179 இறைவர்க்குத் தொண்டா யிடர்தீர்ந்த தன்றிப்
பெறுபயனும் வாகீசர் பெற்றார்—அறிஞர்
வினையான் வினையாக்கிக் கோடல் நனைகவுள்
யானையால் யானையாத் தற்று.

180 உண்ணப் பொதிசோறு மூர்சிவிகை யும்பிறவும்
எண்ண மறிந்தடியார்க் கீந்தருளும்—கண்ணுதல்
போற்
கூறாமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்றும்
மாறாநீர் வையக் கணி.

181 அரனன்பர் வாகீச ரன்றமணை நீங்கப்
பெரிதின்ப மன்றியுண்டோ பீழை—தெரியிற்
பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
பீழை தருவதொன் றில்.

182 நீற்றறையின் மற்றிட்டு நின்றிறைவ னன்பருக்குத்
தோற்றுவதின் றித்துணையாய்த் துன்பமுரு—தாற்று
தலால்
ஊனுயிரால் வாழு மொருமைத்தே ஊனொடுயிர்
தானுணர்வோ டொன்றுந் தரம்.

——

## வடலூர் இராமலிங்கசுவாமிகள் செய்தருளியவை

——

### ஆளுடைய அரசுமாலை

183 திருத்தகுசீ ரதிகையருட் டலத்தி னோங்குஞ்
சிவக்கொழுந்தி னருட்பெருமைத் திறத்தால்
வாய்மை
உருத்தகுமெய் யுணர்ச்சிவடி வாகிச் சைவ
வொளிவிளங்க நாவரசென் றொருபேர் பெற்றுப்
பொருத்தமுற வுழவாரப் படைக்கை கொண்ட
புண்ணியனே நண்ணியசீர்ப் புனித னேயென்
கருத்தமர்ந்த கலைமதியே கருணை ஞானக்
கடலேநின் கழல்தருதக் கருது வாயே.

184 வாய்மையிலாச் சமணதர் பலகாற் செய்த
வஞ்சமெலாந் திருவருட்பேர் வலத்தால் நீந்தித்

தூய்மைபெருஞ் சிவநெறியே விளங்க வோங்குஞ்
சோதிமணி விளக்கேயென் துணையே யெம்மைச்
சேய்மைவிடா தணிமையிடத் தாள வந்த
செல்வமே யெல்லையிலாச் சிறப்பு வாய்ந்துள்
ஆய்மையுறு பெருந்தகையே யமுதே சைவ
அணியேசொல் லரசெனும்பே ரமைந்த தேவே.

185 தேவரெலாந் தொழுந்தலைமைத் தேவர் பாதத்
திருமலரை முடிக்கணிந்து திகழ்ந்து நின்ற
நாவரசே நான்முகனும் விரும்பு ஞான
நாயகனே நல்லவர்க்கு நண்ப னேயெம்
பாவமெலா மகற்றியருட் பான்மை நல்கும்
பண்புடைய பெருமானே பணிந்து நின்பால்
மேவவிருப் புறுமடியர்க் கன்பு செய்ய
வேண்டினேன் அவ்வகைநீ விதித்தி டாயே.

186 விதிவிலக்கீ தென்றறியும் வினைவொன் றில்லா
வினையனேனெனினுமென்னை விரும்பியென்னுள்
மதிவிளக்கை யேற்றியருண் மனையின் ஞான
வாழ்வடையச் செயல்வேண்டும் வள்ள லேநற்
பதிமலர்த்தாள் நிழலடைந்த தவத்தோர்க் கெல்லாம்
பதியேசொல் லரசெனும்பேர் படைத்த தேவே
கதிதருகற் பகமேமுக் கனியே ஞானக்
கடலேயென் கருத்தேயென் கண்ணு ளானே.

187 கண்ணுளே விளங்குகின்ற மணியே சைவக்
கனியேநா வரசேசெங் கரும்பே வேதப்

பண்ணுளே விளைந்தவருட் பயனே புண்மைப்
பதியோங்கு நிதியேநின் பாத மன்றி
விண்ணுளே யடைகின்ற போக மென்றும்
விரும்பேனென் றனையாள வேண்டுங் கண்டாய்
"ஒண்ணுளே யொன்பதுவாய் வைத்தாய்" என்ற
உத்தமனே சித்தமகிழ்ந் துதவு வோனே.

188 ஓங்காரத் தனிமொழியின் பயனைச்சற்றும்
ஓர்கிலேன் சிறியேனிவ் வுலக வாழ்வில்
ஆங்காரப் பெருமதமால் யானை போல
அகப்பாவ மயனுகி யலைகின் றேனுன்
பாங்காய மெய்யடியர் தம்மைச் சற்றும்
பரிந்திலே னருளடையும் பரிசொன்றுண்டோ
தீங்காய செயலனைத்தும் உடையே னென்ன
செய்வேன்சொல் லரசேயென் செய்கு வேனே.

189 செய்வகையொன் றறியாத சிறியேனிந்தச்
சிற்றுலக வாழ்கையிடைச் சிக்கி யந்தோ
பொய்வகையே புரிகின்றேன் புண்ணி யாநின்
பொன்னடியைப் போற்றிலேன் புநித னேநான்
உய்வகையெவ் வகையாது செய்வே னீயே
யுறுதுணையென் றிருக்கின்றே னுணர்வி லேனை
மெய்வகையிற் செலுத்தநினைத் திடுதி யோசொல்
வேந்தேயென் னுயிர்த்துணையாய் விளங்குங்
கோவே.

190 விளங்குமணி விளக்கெனநால் வேதத் துச்சி
மேவியமெய்ப் பொருளையுள்ளேவிரும்பி வைத்துக்

களங்கறுமெய் யன்பரெல்லாங் களிப்ப வன்றோர்
கற்றுணையாற் கடல்கடந்து கரையிற் போந்து
துளங்குபெறுஞ் சிவநெறியைச் சார்ந்த ஞானத்
துணையேநந் துரையேநற் சுகமே யென்றும்
வளங்கெழுமா கமநெறியை வளர்க்க வந்த
வள்ளலே நின்னருளை வழங்கு வாயே.

191 அருள்வழங்குந் திலகவதி யம்மை யார்பின்
அவதரித்த மணியேசொல் லரசே ஞானத்
தெருள்வழங்குஞ் சிவநெறியை விளக்க வந்த
செழுஞ்சுடர்மா மணிவிளக்கே சிறிய னேனை
இருள்வழங்கு முலகியனின் றெடுத்து ஞான
இன்னருள்தந் தாண்டருள்வா யின்றே லந்தோ
மருள்வழங்கும் பவநெறியிற் சுழல்வே னுய்யும்
வகையறியே னின்னருட்கு மரபன் றீதே.

192 தேர்ந்தவுளத் திடைமிகவுந் தித்தித் தூறுஞ்
செழுந்தேனே சொல்லரசாந் தேவே யெம்மை
சார்ந்துதிகழ் அப்பூதி யடிகட் கின்பந்
தந்தபெருந் தகையேயெந் தந்தை யேயுட்
கூர்ந்தமதி நிறைவேயென் குருவே யெங்கள்
குலதெய்வ மேசைவக் கொழுந்தே துன்பந்
தீர்ந்தபெரு நெறித்துணையே யோப்பி லாத
செல்வமே யப்பனெனத் திகழ்கின் றேனே.

## *சிவநேச வெண்பா*

193 பூவுக் கரையரும்வான் புங்கவரும் போற்றுதிரு
நாவுக் கரையரெனு நன்மை—மேவுற்ற

தொண்டர்க்கு நீகட்டுச் சோறெடுத்தா
யென்றறிந்தோ
தொண்டர்க்குத் தொண்டனென்பார் சொல்.

### திருவருண் முறையீடு

194 சொற்றுணை வேதிய னென்னும் பதிகச் சுருதியைநின்
பொற்றுணை வார்கழற் கேற்றியப் பொன்னடிப்
போதினையே
நற்றுணை யாக்கரை யேறிய புண்ணிய நாவரசைக்
கற்றுணை யாதிந்தக் கற்றுணை யாமென்
கடைநெஞ்சமே.

### திருவருள் வழக்க விளக்கம்

195 நாட்டிடற் புகழ்பெற்ற நாவுக் கரசமுன் னுட்பதிகப்
பாட்டிற் கிரக்கமில் லீரெம் பிரானெனப் பாடவன்றே
ஆட்டிற் கிசைந்த மலர்வாழ்த்தி வேத
மமைத்தமறைக்
காட்டிற் கதவந் திறந்தன ராலெங் கடவுளரே.

### கொடைமடப் புகழ்ச்சி

196 கள்ள மற்றவாக் கரசும் புத்திரருங்
களிக்க வேபடிக் காசளித் தருளும்
வள்ள லென்றுமை வந்தடைந் தேற்றால்
வாய்தி றந்தொரு வார்த்தையுஞ் சொல்லீர்
எள்ளரும்புகழ்த் தியாகரென் றெருபேர்
ஏன்கொண் டீரிரப் போர்க்கிட வன்றோ
உள்ள மிங்கறி வீரெனை யாள்வீர்
ஓங்கு சீரொற்றி யூருடை யீரே.

## அருட்டிறத்தலைசல்

197 ஆறடுத்துச் சென்றவெங்கள் அப்பருக்கா
வன்றுகட்டுச்
சோறெடுத்துச் சென்ற துணையே சுயஞ்சுடரே
ஊரெடுத்தோர் காணரிய வொற்றியப்பாவுன்னுடைய
நீறடுத்த வெண்டோ ணிலைமைதனைப் பாரேனே.

—::—

## கரையேறவிட்டநகர்
## திருநாவுக்கரசு சுவாமிகள்
## சரித்திர நவமணி மாலை

(சிதம்பரம், ஈசானிய மடத்து இராமலிங்க சுவாமிகள்)

198 திருமுனைப் பாடிநாட் டிற்றிரு வாமூர்வே
ளாளர்குலத்
தருமுனை வாழ்க்கைப் புகழனர் மாதினி யாரொடுய்ய
வருமுனைச் சைவம் வளரத் திலக வதிபின் வந்தார்
கருமுனை மாய்த்த மருணீக்கி யாரிக் கடனிலத்தே.

199 நில்லா வுலகியல் போர்ந்தற
நேசித்துச் சொல்லிறைவர்
கொல்லாமை நன்னெறி கொண்டமை
போறல் குறித்தமணிற்
செல்லா வதனிலை தேர்ந்து
தருமசே னப்பெயர் பெற்
றெல்லாரை வென்றுறைந் தாரது
முற்றுமலை தோர் குறிப்பே.

200 பேதத் தமண்மதப் பெட்பினைப்
பேதித்து நின்றெழும்பின்
மோதத்த னுக்குக வென்றேத்துந்
தவ்வை மொழிக்கிரங்கிச்
சூதத் ததிகைப் பிரான்சூலை
யாற்றெண்டு கொண்டருள்விண்
ணுதத்தி னுற்றனர் நாவுக்
கரசரந் நன்னுமமே.

201 நாமத்திற் சாவகர் பல்லவற் கீது நவின்று சுண்ணச்
சேமத்தி னுய்த்தும் விடமூட்டி யுந்தந்தி முற்செறித்
துந்
தாமத்தி யிற்சிலை யிற்பிணித் திட்டுமத் தாண்டகவேந்
தேமத்தி னுய்ந்தன ரெம்பெரு மானை யினிதிசைத்தே.

202 இசையி னிலச்சினைச் சூலமிடப மெழிற் புயங்கண்
மிசையிற் கடந்தை விமலனிற் பெற்றமண்
மேயவுடல்
வசையி னிகந்துசம் பந்தரு மப்பரென் றேத்தமன்னி
நசையிற் றிருவடி சூட்டப்பெற் றூர்நல்லூர்
நம்பரினே.

203 ஏத்திய மெம்பொருட் குந்திரு
நாவுக் கரசெனும்பேர்
சாத்தியும் வாழ்ந்தவப் பூதியின்
மூத்தமைந் தர்க்குவிடஞ்
சீத்திறை வீழியிற் பொற்காசு
கொண்டு திருமறைக்காட்
டோத்தினின் மூய கதவந்
திறப்பித் துதவினரே.

204 உதவுறு வாகீச ரொண்பழை யாறை யுமாபதியைக்
கதமுறு சாவகர் தாமறைத் துற்றமை கண்டவரை
யதமுறு வித்தா லயமாக்கி யேத்திநல் லாற்றுணவு
திதமுறு பைஞ்ஞீ லியற்பெற்றுண் டேதொண்டு
செய்தனரே.

205 செய்ய கயிலை யினிற்சிவ
ஞேலக்கஞ் சேவித்துய்வான்
துய்ய பதகரந் தேய
நடந்துஞ் சுடரகலம்
வெய்ய நிணம்பட வேபுரண்
டும்வியன் ஞாலமுய்வான்
ஐயன் மறித்தலைத யாற்றளித்
தான்சொல் லரசருக்கே.

206 சொல்லார் திருப்புக லூரினிற்
சோதனை யின்பொருட்டு
வில்லாரு மாமணி பொன்னர
மங்கையர் மேவவுநீத்
தல்லார் களத்த னடிபுக்
கனரா ளுடையரசர்
எல்லா வுயிர்களு மின்பமுத்
தித்திரு வெய்துறவே,

(வேறு)

207 ஒரு நாவுக் குரைசெய்ய
வொண்ணாத சீர்த்தியரென்
றரு நாமத் தருண்மொழித்தே
வருமொழியத் தகுதியராய்க்

கரு நாமக் களைகளைவான்
கரையேற்று நகரமருந்
திருநாவுக் கரையர்பதஞ் சிந்தையில்வைத்
திறைஞ்சுது மால்.

208 திருவாக்கு மெழிலாரூர் தனிலுதித்தெக் கலையுந்
தேர்ந்ததிகைப் பிரானருளாற் செறிசூலை தவிர்ந்து
கருவாக்கு முருட்டமணக் கடலுமவர் வஞ்சக்
கடலுமவ ரிடுகடலுங் கடந்தருளிற் கதித்தே
மருவாக்கு மலர்ப்பொழில்சூழ் கரையேற விட்ட
மாநகரின் புரிமடத்தில் வாஞ்சையுட னமருந்
திருவாக்குக் கரையர்தமைப் பெருவாக்கினிறைஞ்சிற்
சிந்தித்த பேறனைத்துஞ் சந்திக்கு மெளிதே.

## கரையேறவிட்டநகர்த்
## திருநாவுக்கரசு சுவாமிகள் பதிகம்

( பு. தே. வேங்கடசாமிப் பிள்ளை )

209 கற்றவர்கள் மெச்சுங் கரையேற விட்டநகர்
உற்ற வருட்டிருநா வுக்கரையர்க்—கற்றமிகும்
அற்ற மதியே னறைபதிக முற்றவவ்வூர்க்
கற்பகவி நாயகன்றுள் காப்பு.

210 திருவளரு முனைப்பாடி நாட்டின் மிக்க
திருவாமூர் வேளாளர் குலப்பால் வேலை
வருமணிபோற் புகழனுற் புதல்வ ராகி
மருணீக்கி யாரெனவே வந்தார் தம்மைத்
தெருளாள னருளாளன் சொக்கலிங்கன்
செய்ததிகழ் மணிபுரசைக் கோபு ரத்திற்
கருமுகில்க ணெருங்கிமிகத் தவழ்ந்து லாவுங்
கரையேற விட்டநகர்க் கண்டே னனே.

211 அரியவருட் கலைதழைப்பத் தவமிக் கோங்க
வஞ்ஞான திமிரமற வலரி போலத்
திருவதிகைப் பரனருளாற் சைவ மல்கத்
திலகவதி யாருடனே யுதித்தார் தம்மைப்
பெரியவர்க ளிதயமெனத் தெளிந்து நித்தம்
பெருகிவரு கெடிலநதித் திரைகள் மின்னுங்
கருமணலோ டொளிமணிகள் கொழிக்குஞ்செல்வக்
கரையேற விட்டநகர்க் கண்டே னே.

212 வெஞ்சமணர் மதத்துறுங்கா லவர்க ளாலே
விலக்கவொணுச் சூலையுற வருந்தி யோர்ந்தே
தஞ்சமெனச் சோதரிசொற் படிய ரற்குச்
சாத்துபதி கத்தினங்நோய் தவிர்ந்துய்ந் தாரை
அஞ்சிறைய வோதிமங்கள் கண்ப டுக்கு
மலர்ப்பழனத் துழவர்மடை மிதிக்கச் செந்தேன்
கஞ்சமலர் நின்றுநனி பெருகுஞ் சீர்சால்
கரையேற விட்டநகர்க் கண்டேனே.

213 கொல்லவெணும் பல்லவரா யன்றீ நீற்றுக்
கொடுவறையி லடைத்திடவு மகிழ்ச்சி யெய்தி
எல்லையிலாப் புகழான்மேல் மாசில் வீணை
யென்றுதிருக் குறுந்தொகைப்பாட் டிசைத்தார்
தம்மை
நல்லமணம் வீசுமெழின் மலரிற் றேய்ந்த
நறவதனை வெறியுறவே பருகி யெங்குங்
கல்லெனவே யளிமுரலு நளிர்பூஞ் சோலைக்
கரையேற விட்டநகர்க் கண்டே னே.

214 சற்றுமிரங் காச்சமணர் கல்லிற் கட்டிச்
சாகரத்திற் றள்ளிடக்கற் றெப்ப மாகச்

சொற்றுணைவே தியனெவே பதிகம் பாடித்
  தூயபஞ்சாக் கரந்துணையாக் கரைசேர்ந் தாரைப்
பற்றுபர தத்துவத்தின் பொருளை யோர்ந்து
  பாரினர்க்குப் பரமார்த்தம் பகர வல்ல
கற்றவர்கள் முற்றமெலாங் கலையாள் வைகுங்
  கரையேற விட்டநகர்க் கண்டே னனே.

215 பரிதியொளி யன்மதியன் மறைச்செவ் வாயன்
  பாம்புதனைப் பணியாக்கொள் குருநா தன்மேற்
சுருதிநயக் கவிபொழிந்து சமணர் கூட்டச்
  சூட்டரவுக் கசனியெனத் தோன்றி னுரை
விரிமலரி னறுந்துகளை வீதி தோறும்
  வீசுமிளந் தென்றனிதஞ் சிதறத் தேனைக்
கரியவளி பெரிதும்வழக் குறவே சிந்துங்
  கரையேற விட்டநகர்க் கண்டே னனே.

216 அன்றெரிலே கொணரச்சென் றரவால் மாண்ட
  அப்பூதி யடிகளின்சீர் மைந்தனுக்கு
ஒன்றுகொலா மவர்சிந்தை யென்றே யோதி
  உயிரளித்தன் னுர்விருந்துக் குகந்தார் தம்மை
அன்றிலொடு மயில்குயில் கொக் கன்னம் பூவை
  யவந்திகை யர்க் கம்புறவு சக்ர வாகங்
கன்றுதொட ரானினமான் கயங்கள் சூழுங்
  கரையேற விட்டநகர்க் கண்டே னனே.

217 இடைக்கிடைநன் மாரிபொழி மறைக்காட்டின்கண்
  இரக்கமொன்றி லீரெனவெ பதிக மோதி
அடைத்ததிருக் கதவங்கள் திறக்கச் செய்த
  அப்பரைநல் லுழவாரப் பணிகொண் டாரைத்

தொடற்கரிய தழலிரவி மதியின் மிக்க
சுடர்விளங்கு நவமணிகள் மலைகள் போலக்
கடைத்தெருவில் வணிகரெலாங் குவித்து விற்குங்
கரையேற விட்டநகர்க் கண்டே னுனே.

218 இரும்புவனத் துறுமடியர்க் கெண்ணியநல் வரங்கள்
ஈயமன முவந்துவெள்ளி வரைவா ழீசற்
கரும்பொனினம் பலமெனத்தந் திருவுள் ளத்தை
அமைத்திலகு செம்புனித வப்பர் தம்மைச்
சுரும்பணுக மதம் பொழியு நால்வா யீட்டஞ்
சோலைகளிற் கன்னல்களைத் துய்க்குங் காலக்
கரும்பொழுகு சாறுறலாற் செந்நெ லோங்குங்
கரையேற விட்டநகர்க் கண்டே னுனே.

219 சித்திரையிற் சதயமதிற் சைவ மோங்கச்
சிவப்பேறு பெற்றவெம தப்பர் தம்மைப்
பத்தன்வேங் கடசாமி பணிந்தே யுய்யப்
பத்திநெறி யிலக்கணங்கள் பகர்ந்த கோவை
வித்தகரைத் தாண்டகங்க ளருளி னுரை
வெம்பிறவி கடத்திமுத்திக் கரையி லேற்றுங்
கத்தனெனுங் கற்பகவி நாய கன்வாழ்
கரையேற விட்டநகர்க் கண்டே னுனே.

*வைதிக சைவ சித்தாந்த சண்டமாருதம்*
*சோமசுந்தர நாயகரவர்கள்*

*அருளிய சிவநாமாவளி*

220 வாகீச குணு லய தேஜா
யோகீசவரோ தய போஜா

### வேறு

221 நாவர செனுந்திரு வாள னேயே
நாடுதும் நமக்கில்லை தீ வினையே.

## தனிப் பாடல்கள்

### அற்புதப் பாடல்

222 தலைகொ ணஞ்சமு தாக விளையுமே
தழலி னீறு தடாகம தாகுமே
கொலைசெய் யானை குனிந்து பணியுமே
கூர ராவிடந் தீரெனத் தீருமே
கலைகொள் வேத வனப்பதி தன்னுளே
கதவு மீண்டுங் கடுகத் திறக்குமே
அலைகொள் வாரியிற் கல்லு மிதக்குமே
அப்பர் போற்றும் அருந்தமிழ்ப் பாடலே.

### திருநக்ஷத்திரம்

223 பாடிய சம்பந்தர் வைகாசி மூலம் பயிலுமப்பர்
நீடிய சித்திரை மாதச் சதய நிறைவன் றொண்டர்
ஆடியிற் சோதி திருவாத வூரர்நல் லானிமகந்
தேடிய சேக்கிழார் வைகாசிப் பூசஞ் சிறந்தனரே.

——

224 வாக்கிற் கருணகிரி வாதவூ ரார்கனிவில்
தாக்கில் திருஞான சம்பந்தர்—நோக்கிற்கு
நற்கீர தேவர் நயத்துக்குச் சுந்தரனுர்
சொற் குறுதிக் கப்பரெனச் சொல்.

**திருவருளால்**
**திருநாவுக்கரசர் திருவடிப்புகழ்மாலை**
**முற்றியது.**

திருச்சிற்றம்பலம்.

—:;—

உ

முருகன் துணை

# சிலாசாசனங்கள்

## திருநாவுக்கரசு சுவாமிகள் திருக்கோயிலும் அவைகளுக்கு ஏற்பட்ட தானங்களும், காலமும்.

1. ஸ்ரீ இராச இராச சோழ தேவரது கடைசி ஆண்டு 1913-14ல், தஞ்சைப் பெருவுடையார் கோயில் கண்காணியாளரான, ஆதித்த சூரியன் என்ற தென்னவன் மூவேந்த வேளான் என்ற பிரபு, திருஞானசம்பந்தர், ***திருநாவுக்கரையர்***, நம்பியாரூரனூர், நங்கை பரவையார் முதலான மூர்த்தங்களைப் பிரதிட்டை செய்த செய்தி அக்கோவிலில் அடியிற்கண்டபடி செதுக்கப்பட்டிருக்கிறது,

"ஸ்வஸ்தி ஸ்ரீ உடையார்
ஸ்ரீ ராஜ ராஜீசுரம்
உடையார்க்கு ஸ்ரீ கார்யம்
செய்கின்ற பொய்கை நாடு
கிழவன் ஆதித்தன் சூரியனை
தென்னவன் மூவேந்த வேளான் ஸ்ரீராஜ
ராஜீசுரம் உடையார் கோயிலில்
யாண்டு இருபத்தொன்பதாவது வரை
எழுந்தருளிவித்த செப்புபிரதிமங்கள்.

உடையார் கோயிலில் முழத்தால் அளந்தும் ரத்னங்கள் சரடு நீக்கி தக்ஷிண மேரு விடங்கன் என்னும் **கல்லால்**

நிறை எடுத்தும் கல்லில் வெட்டினபடி—

... ... ... ...
... ... ... ...
... ... ... ...

பாதாதி கேசம் இருபத்து இருவிரலே இரண்டு தொரை உசரத்து இரண்டு திருக்கை உடையராகக் கனமாக எழுந் தருளிவித்த ***திருநாவுக்கரையர்*** ப்ரதிமம் ஒன்று —— இவர் எழுந்தருளி நின்ற, இருவிரலே ஆறுதொரை உசரத்து பத்மம் ஒன்று, இதனோடுங்கூடச் செய்த எண் விரலே ஆறு தொரை சமசதுரத்து, நால்விரல் உசரத்தது ஒன்று

விகுதி

... ... ... ...
... ... ... ...

இவனே ***திருநாவுக்கரையனுக்குக்***கொடுத் தன உருத்ராக்ஷச்சுரி பொன்னின் நூலிற்கோத்த உருத்திராக்ஷம் ஒன்றுட்பட நிறை ஆறு மஞ்சா டியும் இரண்டு மாவுக்குவிலை காசு ஒன்று, கண்டிகை உருத்ராக்ஷம் ஒன்றும், சுரி ஒன்றும் உட்பட நிறை ஐங்க ··· மஞ்சாடியும் குன்றக் குவிலை காசு எட்டு, திருப்பொற்பூ ஒன்று, பொன் முக்காலே நாலுமஞ்சாடியும் குன்றி திருக்கைக்காரை ஒன்று. பொன் இருகழஞ்சு திருக்கைக்காரை ஒன்று, பொன்முக்காலே நாலுமஞ்சாடி

... ... ... ...
... ... ... ...
... ... ... ...

இவன் எழுந்தருளிவித்த ***திருநாவுக்கரை*** யார்க்குக் குடுத்தன. உருத்திராக்ஷம்பொன்னின் சுரிகட்டிற்று ஒன்றும், நாண்படுகண்ணும் கொக்குவாயும் உட்பட நிறைகழஞ்சே ஏழுமஞ் சாடிக்கு விலை காசுமூன்று.(S. I. I. Vol. II No. 38)

———

2. மேலும் அவ்வாதித்தசூரியன் என்பான் கி. பி. 1017ம் ஆண்டில் பல தானங்களைச் செய்த விவரம் ( VoL, II No, 41–ல் ) அடியிற்கண்ட கல்வெட்டில் கண்டிருக்கிறது.

''ஸ்வஸ்தி ஸ்ரீ உடையார், ஸ்ரீ ராஜ ராஜீஸ்வர முடையார்க்கு, ஸ்ரீ காரியம் செய்கின்ற பொய் கைநாடு கிழவன் ஆதித்தன் சூரியனை தென்ன வன் மூவேந்த வேளான் தான் எழுந்தருளு வித்த நம்பியாரூரனார்க்கும், திருஞானசம்பந்தடி களுக்கும், ***திருநாவுக்கரைய தேவர்க்கும்,*** உடையார் ஸ்ரீ ரர்ஜேந்திர சோழ தேவர்க்கு யாண்டு மூன்றுவதுவரை குடுத்த தாரா நிலை விளக்கு ஒன்று. இருப்பு நாராசம் உட்பட நிறை நூற்றிருபதின் பலம் வெண்கல மடல் ஒன்று நிறை நாற்பலம்,

3. 1158, மார்ச்சுமீ 26வ புதன்கிழமை இராஜராச தேவர் II / 2-வது ஆண்டு, தஞ்சைஜில்லா, திருவலஞ்சுழி ஆலயம் ***திருநாவுக்கரசுதேவர்***, திருவாதவூர் அடிகள், திருக்கண்ணப்ப தேவர், இப்பிரதிமைகளுக்குப் பூதானம் செய்தது.—528/02.

4. 1178—1216, மூன்றும் குலோத்துங்கசோழன், செங்கல்பட்டு, திருக்கச்சூராலயத்தில் *திருநாவுக்கரசு தேவர்* பிரதிமை தாபித்ததைக் குறிக்கிறது, அவ்வாலயத்திலுள்ள அஞ்சனாக்ஷியம்மன் ஆலயக்கல்வெட்டு.
316 / 1909.

5. 1255 இராசேந்திரன் III 10-ம் ஆண்டு தஞ்சை கோவிலூர், மந்திரபுரீஸ்வரர் பிள்ளையார் நாயனுர் (*சம்பந்தர்*) திருநாவுக்கரசுநாயனுர் இவர்கள் கோவிலுக்குப் பூதானம் செய்தான். 186 / 1908.

## *பாண்டிய சாசனங்கள்*

6. 1267- ஜடாவர்மன், வீரபாண்டியன், –14ம் ஆண்டு, திருநெல்வேலி ஜில்லா சேர்மாதேவியில் அப்பர் பெயரால் ஆலயம் அமைத்தான். இவ்வாலயம் அப்பர் பெயராலேயே இருப்பது நோக்கத்தக்கது.

7. 1271-மாறவர்மன் வீரபாண்டியன் 9ம் ஆண்டு-தென்ஆற்காடு தீர்த்தநகரி—சிவாங்குரேஸ்வரர் கோயில், இதில் திருநாவுக்கரசு தேவர் திருவிழாமுதல் 12 திருவிழாக்களுக்காக வரிகளைத்தானம் செய்தான். இக்கோவிலில் அப்பர் முதல் நால்வர்களுடைய உருவங்களும் சிறப்பிக்கப் பெற்றுள்ளன.

8. 1295- விக்கிரமபாண்டியன் 12ம்-ஆண்டு இராமனுதபுரம் ஜில்லா திருப்புத்தூர் ஆலயம் கைலாசமுடையார் கோயிலில் திருநாவுக்கரசு தேவர் பிரதிமையை ஒரு தேவரடியாள் தாபித்துப் பணம் தானம் செய்தது. 117/08.

9. 1396- ஜடாவர்மன் பராக்கிரமன் 12ம்-ஆண்டு தஞ்சை, சூலமங்கலம்—கிருத்திவாகேசுவரர் ஆலயம் கைலாசமுடையார் கோயிலில் திருநாவுக்கரசுதேவர் பிரதிமையைத்தாபித்தது. 294/11

திருநாவுக்கரசு சுவாமிகள்
பிரதிட்டை செய்வதில் முயற்சி எடுத்த அரசர்களின்
***விவரம்***

| | அரசர். | காலம். | சாசனம். |
|---|---|---|---|
| சோழர்கள். | 1. இராஜராஜர் I | 985 – 1013 | 1 |
| | 2. இராஜேந்திரர் | 1013 – 1045 | 1 |
| | 3. இராஜராஜன் II | 1146 – 1178 | 1 |
| | 4. குலோத்துங்கன் III | 1178 – 1126 | 2 |
| | 5. இராஜேந்திரன் III | 1245 - 1267 | 1 |
| பாண்டியர்கள். | 6. ஜடாவர்மன் வீரபாண்டியன் | 1253 — | 1 |
| | 7. மாறவர்மன் வீரபாண்டியன் | 1262 — | 1 |
| | 8. விக்கிரம பாண்டியன் | 1283 — | 1 |
| | 9. ஜடாவர்மன் பராக்கிரமபாண்டியன் | 1184 — | 1 |

## திருநாவுக்கரையர் மடங்கள்:- அவைகள் ஏற்பட்டகாலமும் தானம் முதலியவைகளும்.

———

1 திருச்சி ஜில்லா திருப்பராய்த்துறை ஆதிமூலேச்சுவரர் ஆலயத்து முன்மண்டபத்துச் சுவர். கி. பி. 1007–இராஜகேசரிவர்மன் திருபுவனச் சக்கரவர்த்தி இராஜராஜ தேவன் I 22ம் ஆண்டு அந்த ஆலயத்திற்கு அருகில் அமைக்கப்பெற்ற திருநாவுக்கரசுதேவர் மடத்தில் மகேசுவரர்களுக்கு அன்னதானம் செய்ய நிலதானம் செய்தது. (திருச்சி 644)

2. தஞ்சை ஜில்லா நன்னிலம் தாலுக்கா திருவீழிமிழலை—வீழிநாதஸ்வாமி ஆலயம் முதல் பிரகாரத்து வடச்சுவர் கி. பி. 1017–திரிபுவனச் சக்கரவர்த்தி இராசேந்திர சோழ தேவன் – 2ம் ஆண்டு இச்சாசனத்தில் திருவீழிமிழலையில் திருநாவுக்கரசு மடத்துக்குச் சொந்தமான நிலங்களின் அட்டவணை குறிக்கப்பட்டிருக்கிறது.

(தஞ்சை 843)

3. தென்ஆறுகாடு கூடலூர் தாலுக்கா திருவதிகை வீரட்டானேசுரர் ஆலயத்து முதல் பிரகாரத்து தென்சுவர் கி. பி. 1114–இராசகேசரிவர்மன், திரிபுவனச் சக்கிரவர்த்திக்கு குலோத்துங்க சோழன் I —44-ம்ஆண்டு. வாகீசர் மடத்திற்கு நிலதானம் செய்தது (தென்ஆறு 311)

4. செங்கல்பட்டு ஜில்லா, சைதாப்பேட்டை தாலூக்கா வேளச்சேரி, தண்டீசுர சுவாமி ஆலயத்து கர்ப்பக்கிரகத்தின் வடச்சுவர். கி. பி. 1203—திரிபுவனச் சக்கிரவர்த்தி குலோத்துங்கச் சோழதேவன் III ஜயங் கொண்ட சோழமண்டலத்து உட்பிரிவான குலோத்துங்க சோழவள நாட்டுத் திருவான்மியூரில் திருநாவுக்கரசு மடத் திற்குச் சேதிராய தேவனால் பூதானம் செய்தது. அவ்விதம் செய்தநிலமானது வேளச்சேரிஎன்னும் ஜின சிந்தாமணிச் சதுர்வேதிமங்கலம் என்ற ஊரில் இருந்ததாகக் கண்டி ருக்கிறது (செங் 1131)

5. தஞ்சை ஜில்லா மாயவரம் தாலூக்கா குறுக்கை வீரட்டானேசுவரர் ஆலயத்துமுன் மண்டபத்துத் தென்சுவர். கி, பி. 1207. திரிபுவனச் சக்கிரவர்த்தி குலோத்துங்கன் III-29ம்—ஆண்டு. விருதராஜபயங்கர வளநாட்டுக் குறுக்கைநாட்டில் குறுக்கை என்ற விக்ரம சோழசதுர்வேதிமங்கலத்தில் திருப்பள்ளி வேலையாட் களுக்குக் ஊதியத்திற்கும். திருநாவுக்கரசு திருக்குகை கட்டுவதற்கும் அக்குகைக்கு வரும் அபூர்விக்களுக்கு உணவளிக்கவும். திருவைகாசித் திருநாள் உற்சவத்திற்கு வரும் மாகேசுவரர்களுக்கு உணவளிக்கவும், நெல்தானம் செய்தது, மேலும் இவ்வாலயத்தில் திருத்தாண்டகம் ஓதும் செய்தியையும் குறிக்கிறது, (தஞ் 219 17)

6. மதுரை ஜில்லா மேலூர்தாலூக்கா பூதக்குடி, தேதியும் அரசன்பெயரும் கிடைக்கவில்லை. இது அப்பர் சத்திரத்தில் இருக்கும் ஒரு தாமிரசாசனம். இவ்வூரில் ஒரு மடம் இருந்ததை இதுதெரிவிக்கிறது.

மேலும் அப்பர்மடங்கள்

11, 12 ம் நூற்றூண்டுகளிலேயே ஏற்பட்டன {
1, திருப்பராய்த்துறை
2' திருவீழிமிழலை
3. திருவதிகை
4, திருவான்மியூர்
5. திருக்குறுக்கை
6. பூதக்குடி

என்ற ஆறுஇடங்களில் இருந்தன.

பெரிய புராணத்தாலறியப்படும் மடங்கள்.

(1) திருப்பூந்துருத்தித்திருமடம்
(2) அப்பூதியடிகளின் திங்களூர் மடம்

*பண்டைய மன்னர்கள்*
*தேவாரத் திருப்பதிகங்களை ஓதுவித்த விவரம்.*

1. "இராஜகேசரிவர்மரான, இராஜராஜ தேவர்க்கு யாண்டு இருபத்தொன்பதாவதுவரை உடையார் ஸ்ரீ ராஜ ராஜேசுரா உடையாருக்கு திருப்பதியம் விண்ணப்பம்

செய்ய உடையார் ஸ்ரீ ராஜராஜதேவர் குடுத்த பிடாரர் கள் நாற்பத்தெண்மரும், இவர்களிலே நிலையாக உடுக்கை வாசிப்பான் ஒருவனும் " (Vol. II No. 65.)

என வரும் கல்வெட்டால், ஸ்ரீ இராஜராஜேசுவரர் ஆலயத்தில் திருப்பதிகம் வாசிப்பதற்கு 48 பேருக்கு ஏற் பாடுகள் செய்ததை அறியலாம்.

2. கி. பி. 1073 — அதிராஜேந்திரன் — 3-ம் ஆண்டு கும்பகோணம் தாலுக்கா, குகூர் ஆம்ரவணேசுவரர் ஆலயம், அரசன் சௌக்கியமடைவதற்காக மாம்பழ முடைய மகாதேவர் சந்நிதியில் திருப்பதியம் ஓதுதற்கு ஒருவர் பூதானம் செய்தது. 280/17,

3, கி. பி. 1075 — குலோத்துங்கன் 1, 2-ம் ஆண்டு வேதாரணியம் கோயிலில் திருப்பதியம் பாட உரிமை அளித்தது. 422/04.

4. கி. பி. 1225—மாறவர்மன் சுந்தரபாண்டியன் I 9-வது ஆண்டு திருநெல்வேலி, கல்லிடைக்குறிச்சி நாகேசுவரமுடையார் ஆலயம், திருமுறை ஓதுதற்காகத் தானம் செய்தது. 92/07.

5. 22—7—1243, இராஜ III, 28-ம் ஆண்டு தஞ்சை, திருக்காறவாசல் அருமொழிதேவ வளநாட்டுப் புலியூர் நாட்டு மூலூர் கிராமத்தார் திருக்காராயில் ஆலயத்துத் திருக்கைக் கோட்டியில் திருமுறை படிக்கும்

ஓதுவார்களுக்கு உணவு அளிக்கப் பூதானம் செய்தது. (92/07)

6. கி. பி. 1285 ஜடாவர்மன் சுந்தரபாண்டியன், 9-ம் ஆண்டு, தஞ்சை, திருவீழிமிழலை. வீழிநாதசுவாமி ஆலயம், நரசிங்க தேவன் காலத்தில் கட்டின, திருக்கைக் கோட்டியில் திருமுறை ஓதுவதற்குப் பூதானம் செய்தது.

திருவருளால் முற்றுப்பெற்றது.



குமரன் அச்சகம், கும்பேசுவரன் வடக்கு வீதி, குடந்தை.

உ

திருச்சிற்றம்பலம்

ஏவியிடர்க் கடலிடைப்பட்டு இளைக்கின் றேனை
இப்பிறவி அறுத்தேற வாங்கி யாங்கே
கூவியமர் உலகனைத்தும் உருவிப் போகக்
குறியிலறு குணத்தாண்டு கொண்டார் போலும்
தாவிமுதல் காவிரிநல் யமுனை கங்கை
சரசுவதிபொற் றாமரைபுட் கரணி தெண்ணீர்க்
கோவியொடு குமரிவரு தீர்த்தம் சூழ்ந்த
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெம் கூத்த னாரே.

திருச்சிற்றம்பலம்

குமரன் அச்சகம், கும்பேசுவரன் வடக்குவீதி. கும்பகோணம்.